ஸ்ரீ ஆதிசங்கரரின்

# ஸ்ரீ பஜ கோவிந்தம்

... தமிழாக்கம் ...

ஸ்ரீ சக்தி தாஸன்

(ப.ஏ. இராமநாதன்)



... உரை ...

ஸ்ரீராமகதா V. தியாகராஜன்




— வெளியீடு —

ஸ்ரீ ராம கதா நிலயம்

புதுக்கோட்டை.


S.R



Respectfully Dedicated to
the lotus feet of Sri ADI SANKARA &
all Sri Mahatmas of our Bharatha Varsha
who worked for the upliftment of our
noble and great Hindu Religion.



★ ஸ்ரீ: ★

ஸ்ரீ ஆதிசங்கரரின்

# பஜ கோவிந்தம்

( கட்டுரைகள் )

தமிழாக்கம் :
புலவர், ஸ்ரீ ஐ. கோ. இராமநாதன்

எழுதியவர் :
ஸ்ரீ ராமகதாரத்ன, V. தியாகராஜன்

வெளியீடு :
ஸ்ரீ ராமகதா நிலையம்
புதுக்கோட்டை-622001.

1977

## முகவுரை

பிறவி வாய்த்ததன் காரணம் என்ன? நோக்கம் என்ன? பயன் என்ன? பல நிகழ்ச்சிகள் காரணகாரியத் துடர்புக்குக் கட்டுப்படாமல் இருப்பது போலத் தோன்றுவது ஏன்? அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமுறுவது ஏன்? செவ்வியான் கேடுறுவது ஏன்? முழு மன அமைதியும் நிறைவும் கொண்டவர்களைப் பெரும்பாலும் காண இயலாதது ஏன்? துன்பங்களை நீக்கிக்கொள்வது எங்ஙனம்? இவ்விதமான பற்பல வினாக்களுக்கும், அறிவிற் சிறந்த தெய்வத்தன்மை வாய்ந்த பல ஆன்றோர்கள், உரிய விடைகளையும், கைக்கொண்டு உய்வதற்கு வேண்டிய ஒழுகலாறுகளையும், நெடுங்காலத்திற்கு முன்னரே உலகுக்கு உதவியுள்ளனர்.

அத்தகைய ஆன்றோரில் ஒருவரே சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், காணபத்யம், சௌரம் என்ற அறு சமயக் கொள்கைகளை நிலைநாட்டி இந்து சமயத்தைக் காத்து வளர்த்து அருளிய ஆதிசங்கரர் பெருமானவர்கள். சிறப்பு வாய்ந்த பல பல தோத்திரங்களையும், தத்துவ நூல்களையும், மன்பதை உய்யும் பொருட்டுத் திருவாய் மலர்ந்தருளினார்கள். அவற்றுள் மக்களைக் கைதூக்கிவிடுவதற்காக மனமிரங்கி அவர் அருளிச்செய்த பஜகோவிந்தம் என்ற கவிதை நூல் மிகவும் பயனுடையதாகும்.

நீர்மேற் குமிழிபோல் நிலையற்ற இந்த வாழ்வில் மக்கள் மாயையால் கட்டுண்டு, மனம் போனபடி வாழ்ந்து, நொந்து மடிவதைக் கண்ட சங்கரர்பெருமான் பதைக்கிறார். பெண்மையின் நளினத்தால் ஆண்மை மயங்குவதும், ஆண்மையின் பெருமிதத்தால் பெண்மை மருள்வதும், இயற்கை என்றிருந்தாலும், அதிலுள்ள ஆவேசத்தைக் கண்டு இரங்குகிறார். சற்றுச் சினமடைகிறார். கல்வி, செல்வம், அழகு, இளமை போன்றவைகளால் செருக்குற்றிருப்போரைக் கண்டு நகைக்கிறார். மனிதனின் தீராத பண ஆசை கண்டு நகைக்கிறார். தேவைக்கு மிகுதியாகவே செல்வத்தை ஈட்டியும், அதனால்

எவ்விதப் பயனும் துய்க்காமல், அரைவயிற்றுக் கஞ்சியும் ஒட்டுக்கோவணமுமே சாலும் என்று கருதியும், பிறர்க்கு ஈர்ங்கை விதிராமலும், நடைபிணங்களாக உள்ள மதி கெட்ட உலுத்தர்களைக் கண்டு வருந்துகிறார். இமைப் பொழுதில் காலம் என்ற கண்ணில்லாத ஒன்று அனைத்தையும் அடியோடு அழித்துவிடுமென்று இடித்துக் கூறுகிறார். கூற்றுவன் வந்தால் எவரையும் எதுவுமே காக்க இயலாது என்ற உண்மையை விளக்குகிறார். ஆசை, துன்பம், முதுமை, சாவு, முதலிய எல்லா இடர்களிலிருந்தும் காத்துக்கொள்ளுவது எப்படி என்று சுட்டிக்காட்டுகிறார். இவ்வாறு பற்பல அரிய அருண்மொழிகளை, தாம் கொண்ட கழிபேரிரக்கத்தாலும், அளப்பரும் கருணையாலும் நவின்ற சங்கரர்பெருமான், முதற் பாடலிலேயே, இறைவனின் திருநாமத்தை இடைவிடாது, அன்புடன் எண்ணித் தொழுது, வருமாறு அறிவுறுத்துகிறார். அது ஒன்றே இம்மை மறுமைப் பயன்களையெல்லாம் அளிக்க வல்லதாகும் என்று குறிப்பாலுணர்த்துகிறார்.

**மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்**
**நிலமிசை நீடுவாழ் வார்**

என்று தெய்வப் புலவர் பெருமான் உரைத்ததும் இதன் பொருட்டே. அடிசேர்தல் என்பது அன்பால் நினைத்தல் என்று பரிமேலழகர் விளக்கினார். இவ்வாறு இறைவனை அன்பால் நினைப்பவர் பிறவிப் பெருங்கடல் நீந்துவர் என்று தொடர்ந்து மறுமைப் பயனையும் கூறினார் வள்ளுவர். என்றென்றும் கலங்கரை விளக்கமாகத் திகழும் இந்த ஒப்புயர்வற்ற நூல் வடமொழியில் அருளப்பட்டிருக்கிறது. அதன் ஓசை நயமும், பொருள் நயமும், செய்யுளின்பமும் உள்ளத்தைக்கொள்ளைகொள்வனவாம். இதனை நம் தெய்வத் தமிழில் பாடலாக அதே சந்தத்தில் மொழிபெயர்த்தால் நலம் பயக்கும் என்று கருதி எளியேன் ஒருவாறு யாத்தேன். காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு சங்கராச்சார்ய சுவாமிகள் அடியேனின் பணியை வாழ்த்தியருளினார்கள். சென்னை பக்த சமாஜத்தினர் வெளியிட்ட இந்நூலின் படிகள் தீர்ந்துவிட்டன.

என் அன்பிற்கினிய ஆருயிரனைய "ஸ்ரீ ராமகதா ரத்னம்" வே. தியாகராஜனவர்கள் பாடல்களுக்கு விளக்கக் கட்டுரைகள் தீட்டி நூலாக அச்சிட முன்வந்தமைக்கு என் நன்றியும், போற்றுதலும், வாழ்த்தும் உரியன. நெடுங் காலமாக அவர் தெய்வத் தொண்டு, தமிழ்தொண்டுகள்

ஆற்றிவருகிருர். கம்பராமாயணம், நாலாயிர திவ்யப் பிரபந்தம், திருமுறைகள், கந்தபுராணம், சங்க இலக்கி-யங்கள், பிற்காலப் படைப்புகள் முதலிய பல பல நூல் களையும் கற்றுக்கனிந்த நாவன்மையுடையவர். கவிச் சக்ரவர்த்தியின் செவ்விய மதுரம் சேர்ந்த சீரிய கூரிய தீஞ்சொற் கவிகளை, அவர் தம் நிகழ்ச்சிகளில் உரிய சந்தர்ப்பங்கள் அமைத்து இனிய குரலில் செவிகளில் தேனுகப் பொழிவதை நுகர்ந்து இன்புருதார் யாவர்? மேலும் இராமாயண உரை, கந்தரனுபூதி விளக்கம், மதுரையின் மாண்பு போன்ற பல நூல்களையும் இயற்றி வழங்கியுள்ளார். இலக்கிய சமயக் கட்டுரைகளும் அவ் வப்போது வெளியிட்டுவருகிருர். தில்லையம்பலத் திருக் கோவில் மதில் திருப்பணிக்குப் பொருளுதவியும், மற்றும் பல நற்காரியங்களும் தொடர்ந்து புரிந்துவருகிருர். இவருடைய சிறந்த தொண்டுகளைப் பாராட்டிப் பற்பல இடங்களில் பெருமக்கள் பற்பல சிறப்புக்கள் செய்துள்-ளனர். அண்மையில் சிருங்கேரி ஆஸ்தான வித்வானுகவும் அமர்த்தப்பட்டிருப்பது மகிழ்ச்சிக்குரியதாகும். அதே சமயத்தில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடமும் அவரது சேவையைப் பாராட்டி 'ஸ்ரீ ராமகதாப்ராண' என்ற பட்டமளித்துச்சிறப்பித்துள்ளது. **இரு பெரும் பீடங்களின் ஆதரவு பெற்ற பாக்யவான்களில் இவர் ஒருவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.**

இத்தகைய வல்லவர், நல்லவர் தீட்டிய பஜகோவிந்த விளக்கக் கட்டுரைகள் சுவைத்தும்பித் திகழ்வதன்றி மற்று எப்படி இருக்கமுடியும்? கட்டுரைகளின் தலைப்பு களே அவருடைய நுண்மாண் நுழைபுலத்தைப் பறை சாற்றுகின்றன:

திரு வெ. தியாகராஜன் அவர்கள் அயர்வின்றித் தெய்வத் தொண்டு, தமிழ்த் தொண்டுகள் ஆற்றிப் பல்லாண்டு வாழ்ந்து எல்லா நலனும் இனிதின் எய்துமாறு எல்லாம் வல்ல ஆலவாய் அவிர்சடை அண்ணலையும், அங்கயற்கண்ணியம்மையையும் இறைஞ்சுகிறேன்.

கோயம்பத்தூர்-7
11—2—1977

"தேவிதாசன்"
**ஐ. கோ. இராமநாதன்**

## ஆக்கியோன் முன்னுரை

"இறைவனைத் துதி" என நம் முன்னோர்கள் யாவரும் நமக்கு நல்வழி காட்டினர். அத்தகைய சான்றோர்களில் ஜகத்குரு ஸ்ரீ ஆதிசங்கரரும் ஒருவர். மனிதன் உலகில் சிறிது காலம் வாழ்ந்தபோதிலும் பெரிய காரியங்களைச் செய்ய முடியும் என்பதைக் காட்டிய பெரியவர். வட-மொழியில் ஸ்ரீ ஆதிசங்கரர் எழுதிய நூல்களை நந்தமிழ் நாட்டுச் செந்தமிழ் மக்கள் அறிந்து அவ்வழி நடந்து "சகல செல்வயோகமிக்க சுகவாழ்வு" பெற்று உய்ய வேணுமென்ற நல் உள்ளத்துடன், எங்கள் கொங்கு நாடு தந்த தங்கக் கவிஞர், கோவை, கவியரசு, நடேசக் கவுண்டர் அவர்கள் ஸ்ரீ ஆதிசங்கரரின் "ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்கம்" "ஸ்ரீ சிவானந்தலகரி" முதலானவற்றையும், மற்ற பெரியோர்கள் வடமொழியில் இயற்றிய நூல்களையும், கவிதையுருவில், அதே சந்தத்தில், தமிழில் எழுதி வெளியிட்டனர். "ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்கம்" தமிழில் எமது உரையுடன் வெளியிடும் பேறு பெற்றோம்.

ஸ்ரீ கவுண்டர் அவர்களின் மாணாக்கரும், மும்மொழிப் புலமையுடையவரும் எமது ஆருயிர் நண்பருமான "சக்தி தாஸன்" என்ற திரு I. G. ராமநாதனுர் "பஜகோவிந்தம்", "கனகதாரா ஸ்தோத்ரம்" "ஸ்ரீ மீனாட்சி பஞ்சரத்னம்" முதலானவற்றை அதே சந்தத்தில் தமிழ்க் கவியாக மொழி பெயர்த்துத் தமிழுலகிற்குத் தொண்டு செய்துள்ளார்கள். இவர்களது "கீதை" தமிழாக்கம் மிகவும் பிரசித்தமானது. உலகம் இந்த பகவத்கீதை மொழிபெயர்ப்பினுல் பயன் அடையப்போகிறது என்பதில் ஐயமில்லை. பெருங் கவிஞரான திரு ஐ. கோ. ராமநாதன் அவர்கள் பஜ கோவிந்தம் தமிழாக்கப் புத்தகத்தை யாம் வெளியிட அனுமதியளித்ததுடன், இதற்கு அழகியதொரு முகவுரையும் அளித்தனர். எமது நன்றியை அவருக்குத் தெரிவிக்க எம்மிடம் சொற்களே இல்லை. அவரது கருணையுள்ளத்தை வாழ்த்தி வணங்குகிறோம்.

தமிழ்நாட்டில், ஏன், அகில இந்தியாவிலும், T.V.S. என்ற மூன்றெழுத்து ஸ்தாபனத்தை அறியாதவர் இருக்க முடியாது. இளம் பருவத்தில் அந்தக் குடும்பத்தின் குழந்தைகளுடன் கல்வி பயிலவும் பழகவும் பேறு பெற்றேன். அந்த நல்ல குடும்பத்தின் தலைவரான உயர்திரு T. S. ராஜம் அவர்கள் எனக்கும் என் குடும்பத்திற்கும் இதுவரை செய்துள்ள நன்மைகளேயும் உபசாரங்களேயும் மறக்கவே முடியாது. கணக்கிடவும் முடியாது. இந்தப் புத்தகம் வெளியிடுவதற்காக அவர்கள் பேருதவி புரிந்து எனக்குக் கவலையில்லாது செய்தனர். அக்குடும்பம் நீடூழிகாலம் நிலேத்தோங்கி வாழ்ந்து உலகினருக்கு உதவி செய்து இன்புறும் பேற்றை அளிக்க ஸ்ரீ சீதாராமனே வேண்டுவது தவிர எளியேனுல் என்ன செய்யமுடியும்?

தை அமாவாசையன்று *(19-1-1977)* ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளாகிய ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி மஹாசன்னிதானம் அவர்கள் அடியேனுக்கு "ஸ்ரீ ராமகதாப்ராண" என்ற பட்டமளித்து ஆசி கூறினுர்கள். என் நன்றியைப் பெரியவர்களுக்கு எப்படிக் காட்டுவேன். இந்தப் புத்தகத்தின்மூலம் வரும் லாபம் பூராவும் அவர்கள் உத்திரவின் பிரகாரம் எந்த தர்மத்திற்கு நன்கொடையளிக்குமாறு சொல்லுகிறுர்களோ அதற்கே அளிக்கத் தீர்மானித்துள்ளேன். உலகில் சகலவிதமான பெரியோர்களின் ஆசியும் எனக்குக் கிடைக்கவும், என் நற்பணிகள் மேலும் மேலும் நடைபெறவும், யாவரும் ஆசிகூறப் பிரார்த்திக்கிறேன்.

அன்பன்
"ராமகதாப்ராண"
**V. தியாகராஜன்**

புதுக்கோட்டை
*9—3—1977*

# 1. வாசித்துக் காணுதது!

"பஜ கோவிந்தம்" என்ற முதலடியின் முதல் வாக்கையே இப்புத்தகத்தின் பெயராக வழங்குகின்றனர். ஸ்ரீ ஆதிசங்கராசாரியாளின் முதற் குரு ஸ்ரீ கோவிந்த பாதர் என்பதால் இறைவனை திருமாலுக்கு எத்தனையோ திருநாமங்களிருக்க கோவிந்தன் என விளித்துப் பாடினர் என்ப. திருமால், தான் பையத்துயின்ற பாற்கடலினின்று எழுந்து கண்ணனுக வந்து, இந்திரனல் **"கோவிந்த பட்டாபிஷேகம்"** செய்த பின்னர், வைகுண்டபதியான நாராயணன் என்ற பெயர் சிறியதாகிவிட்டதாம். "இந்திரன் வந்து கண்ணபிரானுக்குக் கோவிந்தாபிஷேகம் பண்ணின பின்பு, அவனை நாராயணனென்கை குற்ற-மிறே. ஒருவன் முடி சூடப்பெற்ற பின்னர், அவனை முன்னைப் பெயரிட்டழைக்கைக்கு மேற்பட்ட குற்ற முண்டோ" என்கிறது ஸ்ரீ வைணவ ஆருயிரப்படி வியாக்யானம். ***(சிறு பேரழைத்தனவும் சீறியருளாதே என்ற திருப்பாவையின் ஓரடிக்கு விளக்கம்)***

பெரியவரான ஆசாரியாள் பெரிய பெயரினலேயே இறைவனைக் குறிப்பிடுகிறார். **"விரைசொல் அடுக்கே மூன்று வரம்பாகும்"** என்ற தமிழிலக்கண வரம்பு வட மொழிக்கும் உண்டு போலும்! எனவே மூன்றுமுறைகள் **பஜ கோவிந்தம்! பஜ கோவிந்தம்! பஜ கோவிந்தம்!** எனக் கூறினர். புத்தியிருந்தும் அதை நல்வழியில் பயன் படுத்தாதவனை **துன்மதி** என்பர். சீதாபிராட்டியை, எல்லா மறிந்த இராவணன், சிறையிட்டது கண்டு "தீயை பத்திரப்படுத்துகிறேன். ஒளித்துவைக்கிறேன் என்று தனது மேல் துணியிலேயே மறைத்துவைத்துக்கொண்ட மாதிரி காரியமன்றோ இது! **"சுடுதீயைத் துகிலிடைப் பொதித்த துன்மதி"** என இராவணனுக்கு அறவுரை கூறும்போது, துன்மதி! என இராவணனின் துணைவர் களில் ஒருவன் விளிக்கிறான். எது தக்கது எது தகாதது என அறியாது திண்டாடும் மனத்தை **மூடமதி!** எனக் கழிவிரக்கங்கொண்டு அழைக்கின்றார் ஆசாரியாள்.

" ஏ மனமே! இறைவனது நாமத்தைக் கூறு. மரணம் வரும்போது படித்தவன் என்பதற்காக மன்னிக்குமா? வேதாந்த சூத்திரங்களும், மந்திரங்களும் உன்னை மரணத் திலிருந்து காவா," என்கின்றார். கல்வியை நேர்மை

யாகக் கற்ருல் இறைவனை தியானம் முதலான வழிகள் மூலம் அடைய அறிவு தருமே தவிர, யமனிடமிருந்து காவாது. எனவே படித்தவன் என்ற தருக்கிலே மனிதன் நிலையழிந்துவிடக்கூடாது என எச்சரிக்கிருர். ஆண்டவன் கொடுத்த உடல் அழியுமுன், எந்நேரம் அழிவு வந்து விடுமோ என்ற எச்சரிக்கையுடன் இருத்தல் வேண்டும். பரீக்ஷித் மகாராஜன் ஒருவனுக்கு மாத்திரந்தான் தனக்கு எப்போது மரணம் நேரப்போகிறது என்பது முன் கூட்டியே தெரியும். நமக்குத் தெரியாது, எனவே கல்வி முதலியவற்ருல் செருக்குருமல் இறைவனது நாமத்தைக் கூறுவாய் என்கிருர் கருணமூர்த்தியான ஸ்ரீ சங்கரர்.

भज गोविन्दं भज गोविन्दं
भज गोविन्दं मूढमते ।
सम्प्राप्ते सन्निहिते काले
नहि नहि रक्षति डुकृञ्करणे ॥

பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம்
பஜ கோவிந்தம் மூடமதே ।
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே
நஹி நஹி ரக்ஷதி டுக்ரிஞ்கரணே ॥ 1

தமிழாக்கம்

**கோவிந்தன் துதி கோவிந்தன் துதி**
**கோவிந்தன் துதி மதிமூடா**
**சாவின்தன் கதி மேவும் அந்தியுன்**
**பாடம் தந்திரம் ஏதும் காவா.**

பருத்தியை ஆடையாகச் செய்துகொடுத்த பின் அதைத் தரித்துக்கொண்டு அழகு செய்துகொண்டு கர்வப்படலாமா? அதுபோல் பெரியோர்கள் எழுதிவைத்த நூல்களைப் படித்தோம். அவற்றில் சிலவற்றைக் கற்று ஏன் கர்வப்படவேணும்?

*பருத்தி விதைத்தெடுத்து நூலாக்கி ஆடை*
*பண்ணியளித்தால் அதை உடுத்தல் பாரமாமோ?*
*திருத்தி மண்ணில் செந்நெல் விதையரிசியாக்கித்*
*தீஞ்சோறு அட்டு ஊட்டில் உண்ணச்செவ்வாய் நோமோ?*

**அருத்தமொடு யிலக்கணங்கள் இலக்கியங்கள்**
**அரியநூல் பல முன்னோரளித்ததாலே**
**கருத்தே அந்நூல் சில கற்றுணர்ந்து**
**கவிசொல்லல் வியப்பன்று கர்வமென்னே.**

—நீதிநூல்

கல்வி நம் உயிரை யமனிடமிருந்து காக்காது என்பதை யறிந்து இறைவனுடைய திருநாமங்களைக் கூறுவதே கல்வியின் பயனென அறிந்து வாழ்வோமாக!

ஓம் ஸ்ரீ குருப்யோ நம:

## 2. மெய்த்திருவும் பொய்த்திருவும்

"சுவற்றை வைத்துச் சித்திரம் எழுதவேண்டும்" என்பது பழமொழி. உடலிருந்தால்தான் இறைவனை நினைக்க வழி தேடலாம். வாழ்த்தும் வாயும் நினைக்கும் நெஞ்சும் தாழ்த்தும் சென்னியும் தேகமிருந்ததால்தானே! அதனாலே கோவிந்தனை நினைத்து, பாடி, வணங்குமாறு கூறினார். கல்விச் செருக்குக் கொள்ளாதே எனக் கூறியவர், பணத்தாசை கொண்டு அதைத் தேடியடைந்தால் இறைவனை மறக்கச் செய்துவிடும் என்பதால் பண ஆசை வேண்டாம் என்று கூறுகிறார்.

பக்தராகிய குசேலர் துவாரகை சென்று திரும்பியதும் தனது செல்வப் பெருக்கைக் கண்டு கலங்கி 'இறைவனே! உன் திருவடி தியானம் செய்வதற்கு இது ஒரு இடையூறு. ஆதலால் இதனைத் திரும்ப எடுத்து எனக்குப் பழைய வறுமையையே அருளுக' என்றாராம்.

**செய்ய நின்னடித்தியானம் செய்து நாள் கழியா**
**நிற்பேற்கு**
**ஐய! ஈது இடையூறாகி அடைந்தது;**

என்கின்றது குசேலர் வரலாறு. செல்வத்தை நல்ல வழியில் சிலவு செய்யவேணும். கடவுளாலயத்திற்கு அளித்தும், புராண நூல்கள் கேட்டு மகிழ்வதற்கும், ஏழைகளுக்கு உதவினால் நற்கதி கிடைக்கும்.

**கைப்பொருள் கிடைத்த ஞான்று கடவுளாலயத்திற்கு ஈந்தும்**
**மெய்ப்படு புராண நூல்கள் விருப்பொடு கேட்டு உவந்தும்**
**வைப்பென இரப்போர்க்கு ஈந்தும் வருபவர் உளரேல் கூற்று**
**மொய்ப்புயத்தண்டம் தப்பி முன்னவன் இன்பத்து ஆழ்வார்.**

நல்ல வழியில் ஈட்டும் பொருளை மெய்த்திரு என்பர். இந்த அரசை ஏற்றுக்கொள் என தசரத மகாராஜன் இராமனிடம் கூறியதைச் சொல்லவந்த கம்பன் மெய்த் திருப்பதம் மேவு என்றான் என்பது கம்பன் கூற்று. பொல்லாத வழியில், தீய வழியில் பொருளீட்டுவதை "பொய்த்திரு" என்பது குறிப்பு. செல்வத்தை ஆங்கிலத் தில் WEALTH என்பர். பேரறிஞரான பெர்னாட்ஷா, நல் வழியில் ஈட்டிய பொருள்தான் WEALTH என்றும், தீய வழியில் வரும் பொருளை ILLTH எனப்பெயரிட்டார் என்பர்.

எவ்வளவு பணமோ பொருளோ இருந்தாலும் நம் தேவையென்னவோ சிறிதுதான். ஆயிரக்கணக்கான ஏகரா நிலமிருந்தபோதிலும் நாம் அடங்கப்போவது ஆறு அடி நிலம்தான். கோடி மூட்டை அரிசி இருந்தாலும் நம் வயிறு ஏற்பது வீசம்படிகூட இல்லை. பாற்கடல் பூராவை யும் பூனை நக்கிக் குடித்துவிட முடியுமா? பணக்காரன் என்பதற்காக நமக்கு ஏதாவது நன்மையுண்டா?

***நிறைசெல்வமுடையாரை நோய்துன்பமணுகாவோ? நினைத்தவெல்லாம்***
***குறையின்றிப்பெறுவாரோ? புவிக்கரசு செலுத்துவாரோ? குறித்தவாயுள்***
***பிறையென்ன வளருமோ? இயமன் வர அஞ்சுவானோ? பேரின்பத்துக்கு***
***உறையுளோ அவர் கிரகம்? இவையெலாம் மனமே நீ உன்னுவாயே:***

***— நீதிநூல்***

"போதுமென்ற மனமே பொன்செய்யு மருந்து" என்றும் '*செல்வமென்பது சிந்தையின் நிறைவே*' என்றும் '*அற்றது பற்றெனில் உற்றது வீடு*' என்றெல்லாம் நமக்கு

இடித்து உரைத்துப் போந்தனர். ஆசையே கூடாது என்பது முன்னோர் கொள்கை. அதிலும் பேராசையைப் பிணி என்பர்.

மதுரையில் வணிகன் ஒருவன் மகப்பேறில்லாது வருந்தி, தனது சகோதரியின் மகனுக்கே தனது சொத்துக்களை அளித்து, மகனாகக்கொண்டு வளர்த்து, அடுத்த பிறவியிலாவது மகப்பேறு பெறவேணுமென்று, காடு சென்று தவம் செய்யலானன். அந்நிலையில் வணிகனின் தாயாதிக்காரர் ஒன்று கூடி, வளர்ப்புப் பையனையும் அவனது தாயையும் அடித்து விரட்டிச் சொத்துக்களைக் கைக்கொண்டனர். பாண்டியனது சபையில் தாயும் மகனும் சென்று தங்களது வழக்கைக் கூறி முறையிட்டனர். அதுபோது மதுரை நாயகனை சிவபெருமானே காட்டில் தவத்திற்காகச் சென்ற மாமனாக வந்து பாண்டியன் சபையில் வழக்கில் வென்று பொருளையெல்லாம் மீட்டு மருமகனுக்கே அளித்துச் சென்றார் என்ற மாமனாக வந்து வழக்குரைத்ததாக ஒரு வரலாறு மதுரைத் திருவிளையாடற் புராணத்தில் உள்ளது. அதில் "வட்டி அதிகமாக வாங்கியோ, நண்பர்களுக்கு வஞ்சனை செய்தோ, ஏழைகளுக்குத் தருமம் செய்யாமலோ கெட்ட வழியில் சம்பாதிக்கப்பட்ட பொருளல்ல நம் பொருள். தரும வழியில் ஈட்டப்பட்ட பொருள் இது எனக்கூறினர்.

**நட்பிடை வஞ்சஞ்செய்து நம்பினார்க் கூன் மாருட்டத்**
**துட்படக் கவர்ந்தும் ஏற்றோர்க்கு இம்மியும் உதவாராயும்**
**வட்டியின்மிதப்பக்கூறி வாங்கியும் சிலர் போலீட்டப்**
**பட்டதோ அறத்தாறீட்டும் நம் பொருள்படுமோ என்னு.**

—திருவிளையாடல்

தீய வழியில் சம்பாதிக்கப்பட்ட பொருள் நம்மை விட்டு நீங்கிவிடும். நல் வழியில் ஈட்டப்பட்ட பொருள் நல்ல காரியங்களுக்குப் பயன்பட்டு, நமக்குப் புண்ணியத்தையும் அளிக்கும். மாணிக்கவாசகர் சரிதையில் இறைவன் பாண்டியனை நோக்கி "பாண்டிய! உன் பொருள்கள் நல்வழியில் ஈட்டப்பட்ட பொருள். அது புனிதமானது. அதனாலேயே மாணிக்கவாசகர் அப் பொருளை நமக்கு அளித்தனர்" என்று கூறினர்.

**மறத்தாறு கடந்த செங்கோல் வழுதி! நின்**
**பொருள்களெல்லாம்**
**அறத்தாற்றின் ஈட்டப்பட்ட: அனையவை புனிதமான**

திறத்தாலே நமக்கு நம்மைச்சேர்ந்தவர் தமக்கும் ஆர்வம்
உறத்தாவில் வாதவூரன் உதவினன் ஆதலாலே.

—திருவிளையாடல்

எனவே உலக குருவான ஸ்ரீ ஆசாரியாள் பேராசை கொண்டு தவருன வழியிலே பணத்தைச் சம்பாதிக்காதே. நல்வழியிலேயே பொருளீட்டுவாயாக எனக் கூறுகிருர்.

मूढ जहीहि धनागमतृष्णाम्
कुरु सद्बुद्धि मनसि वितृष्णाम् ।
यल्लभसे निजकर्मोपात्तम्
वित्तं तेन विनोदय चित्तम् ॥

மூட ஜஹீஹி தநாகமத்ருஷ்ணம்
குரு சத்புத்திம் மநஸி வித்ருஷ்ணம் |
யல்லபஸே நிஜகர்மோபாத்தம்
வித்தம் தேந விநோதய சித்தம் || 2

தமிழாக்கம்

காசுபணத்தைத் தேடுவதிற்பே
ராசையை விட்டுதருய் நீ மூடா
மாசறு நேறிசார் மேனள் வினையா
லேசேர் பொருளாலே மகிழ்வுறுவாய்

ஓம் ஸ்ரீ சத்குருப்யோ நம:

## 3. மோகம்கொண்டு கலங்கேல்

மனிதன் கல்விச் செருக்கை விட்டுவிடலாம். பணத்தாசையையும் வென்றுவிடலாம். காமம் என்பது கொடிய நோய். பாம்பாகிய ராகு சந்திரனை விழுங்கியது போல் ஆசையாகிய பாம்பு, புத்தியாகிய (சந்திரனை) மதியை விழுங்கிவிடும் என்பர். "பெண்ணின் உறுப்புக்களைக் கண்டு ஆசை கொள்கிருயே! இது தவறல்லவா?" என்கிருர் ஆசாரியாள். காமத்தால் அழிந்தவர் கணக்கில்லாதவர். தேவர் தலைவனன இந்திரனே பெண்ணசையால் கெட்டான்.

**சந்திரற்கு நேருவமை சாலும் திருமுகத்துப்
பைந்தொடிக்கை நல்லார் பலரும் புடைசூழக்
குந்தமொத்த நாட்டத்துக் கோதமனுர் பன்னியினுல்
இந்திரற்கு விடர்ப்பழியொன் றெய்தியதே.**

"பெண்ணின் உறுப்புக்களின் அழகைக் கண்டு மயங்காதீர்கள். முள்ளிலும் கல்லிலும் நடக்கும் காலைப் பஞ்சென்கிறீர்கள். வெள்ளெலும்பாலே உருக்கொண்ட கணைக்காலை வரால் மீன் போன்றது என்றும், எலும்பும் தசையும் சேர்ந்த துடையை வாழைத் தண்டு என்றும், உடலைத் தாங்கி நிற்கும் இடையை துடியிடை என்றும், மலசலம்நிறைந்து அழுக்கானவயிற்றை ஆலிலையென்றும், சிலந்திபோல் விம்மி மாமிசபிண்டமான மார்பை தாமரை மொட்டென்றும், நீட்டவும் முடக்கவும் உபயோகமாகும் கைகளைக் காந்தள் மலரென்றும், வேர்வையும் அழுக்கும் நிறைந்த கழுத்தை கமுகு என்றும், ஊத்தை நிறைந்து நாற்றமுள்ள வாயைப் பவழவாய் என்றும், சோறும் கறியையும் அரைத்துத் தரும் பற்களை முத்தென்றும், நீரும் சளியும் நிறைந்த மூக்கைக் குமிழென்றும், பீளையும் தண்ணீரும் வரும் கண்ணை நீலமலர் என்றும், குறும்பி நிறைந்த காதை மடலென்றும், வள்ளைத் தண்டு என்றும், எண்ணையிடாவிட்டால் சிக்குப்பிடித்துப் பேன் வளரும் கூந்தலை கருமேகமென்றும் பெண்ணை அங்கம் அங்கமாக வர்ணிக்கின்றீர்களே! இந்த நேரத்தில் இறைவனை எண்ணி வணங்கலாமே" என்பார் பட்டினத்தார். "சகல சாத்திர பண்டிதர்களிடம் சென்று நல்ல நீதிகளையும் நெறியையும் அறியாமல் ஏன் உழலவேணும்?"

**ஆயாய் பலகலை ஆய்ந்திடும் தூய அருந்தவர்பால்
போயாகிலும் உண்மையைத் தெரிந்தாயில்லை:
பூதலத்தில்
வேயார்ந்த தோளியர் காமவிகாரத்தில் வீழ்ந்தழுந்திப்
பேயாகி விழிக்கின்றனை மனமே! என்னபித்துனக்கே.**
என்கிருர்.

வேல்போன்ற விழியுடைய மங்கையரையும், மயில் போன்ற அவரது சாயலையும் நினைக்கலாமா? வேலையும் மயிலையும் எண்ணி முருகனதருள் பெறவேண்டாமா? என்பர் அருணகிரிநாதர். **"பெண்ணைை மறக்கவே வேண்டும்: உனை மறவாதிருக்கவேண்டும்'!** என்பர்

ஸ்ரீ ராமலிங்கர். ஆண்டவன் குடிகொண்டுள்ள இதயத்தில் பெண்ணாசை புகாது. பெண்ணாசையுள்ள இதயத்தில் ஆண்டவன் இருக்கமாட்டான் என்பது குறிப்பு.

எனவே பெண் என்பது ஒரு மாமிசக் குவியல். அது கண்டு மனம் மாழ்கி மயங்கவேண்டாம். இறைவனை கோவிந்தனை வணங்கு என்கிறார் ஸ்ரீ ஆதிகுரு.

नारीस्तनभरनाभीदेशम्
  दृष्ट्वा माया मोहावेशम् ।
एतन्मांसवसादि विकारम्
  मनसि विचिन्तय वारं वारम् ॥

நாரீஸ்தனபர நாபீதேசம்
  த்ருஷ்ட்வா மாயா மோஹாவேசம் ।
ஏதன் மாம்ஸ வஸாதிவிகாரம்
  மநஸி விசிந்தய வாரம் வாரம் ॥

தமிழாக்கம்

நாரியர் கொங்கை நாபிகள் கண்டே
  மீறிய மோகம் கொண்டு கலங்கேல்
கூரிய சிந்தையி னறியங்கவை
  கொழுவின் தசையின் கூறுகளென்றே. 3

## 4. நிலையாத சமுத்திரம்

வாழ்வு நிலையில்லாதது. அடுத்த கணம் என்ன நடக்குமென்பது எவருக்குத் தெரியும். உலகம் ஒரு நாடக மேடை. மனைவி, குழந்தை, கணவன் என்று கூடிப் பிரியும் சந்தைக் கூட்டம். நம் நாடு மக்களுக்குக் குழந்தைப் பருவத்திலிருந்தே வேதாந்தத்தைப் போதிக்கக் கூடியது. தொட்டிலில் உள்ள குழந்தையைத் தாலாட்டும் போது கூட, யார் யாரோ? யார் இராரோ? (இதன் திரிபு தான் ஆராரோ—ஆரிராரோ என்ற குழந்தை தாலாட்டு) என்று பாடி எங்கிருந்து வந்தோமோ? யார் எந்நிலையில் பிரிவோமோ என்று தொனிக்கப்பாடும் வழக்கம். உடம்பு நிலையில்லாதது.

அதேபோல் செல்வமும் நிலையில்லாதது. எவ்வளவு சம்பாதித்தாலும் நம் கூட எதுவுமே வராது.

**வாதுற்ற திண்புயர் அண்ணுமலையர் மலர்பாதத்தைப்**
**போதுற்று எப்போதும் புகலு நெஞ்சே! இந்த பூதலத்தில்**
**தீதுற்ற செல்வம் என்? தேடிப் புதைத்த திரவியம் என்?**
**காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே**

என்கிருர் பட்டினத்தார். எனவே பொருளும் நிலையற்றது.

தான் என்ற அகந்தை நிறைந்தது வாழ்வு. அது உள்ளத்திற்கு வரும் நோய். இது நற்கதி கிடைக்கத் தடங்கல் செய்யும். இத்துடல் உடலுக்கும் நோய் வரும். மனதிற்கும், உடலுக்கும் நோய் வந்தால் நற்கதி அடைவது எப்படி ?

வயதானபின் நோய் வரும். எல்லோரும் கைவிடும் போது நோய் கைவிடாது வரும். நோயும் நாம் படுத்த பாயும் தவிர நமக்கு வேறு ஏது கதி?

**தாயாரும் சுற்றமும் பெண்டிரும் கைவிட்டுத்**
**தாழ்ந்திடு நாள்**
**நீயாரு நானுரெனப் பகர்வாரந்த நேரத்திலே**
**நோயாரும் வந்து குடிகொள்வரே கொண்ட நோயுமொரு**
**பாயாரு நீயுமல்லாமல் பின்னையேது நட்பாம் உடலாலே**
—பட்டினத்தார்

மூப்பும் நோயும் இருந்தாலும், மன நிம்மதியுடனிருக்கலாமென்ருல் அது கிடைப்பதில்லை. குடும்பத்தில் குழந்தை பிறக்கப் போகிறது என்ருல் அது ஒரு கவலை. தாயும் சேயும் வேருகி உயிருடனிருக்க வேண்டுமே என்று. குழந்தை நன்கு பிறந்து விட்டால் அதை வளர்ப்பதற்காக உண்டாகும் துன்பங்கள். குழந்தைக்கு நோய் வந்துவிட்டால் துன்பம். பெரியவனுகி விட்டால் அடங்க மாட்டேன் என்கிருனே என்ற துன்பம். நடுவில் குழந்தைக்கு ஏதாவது அபாயம் நேர்ந்து இழந்து விட்டோமென்ருல் தாங்கமுடியாத துன்பம்? குழந்தைப் பேற்றிலேயே எத்தனை துன்பம் என்கிருர் குசேலர் சரித்திரத்தில்

**மதலையைப் பெருநாள் துன்பம்; வளர்ந்திடும்**
**நாளும் துன்பம்;**
**விதலை நோயடையின் துன்பம்; வியன் பருவத்தும்**
**துன்பம்**
**கதமுறு காலர் வந்து கைப்பற்றின் கணக்கில் துன்பம்;**
**இதமுறல் எந்நாள் சேயால் எற்றைக்கும் துன்பமானால்.**

குழந்தையையும் குடும்பத்தையும் காப்பதற்காகப் பொருளீட்டுகிறோம். பொருளும் நமக்கு மேலும் இன்னல் களை உண்டாக்கக் கூடியது. பொருளைச் சம்பாதிப்பதற்கு துன்பமடைகிறோம். பின் அது பத்திரமாக இருக்க வேண்டுமே எனத்துன்பம். அதைச் சிலவு செய்யும் போதும் துன்பமே. அதை வஞ்சனையால் எவரிடமாவது இழந்துவிட்டால் அதுவும் துன்பமே.

**இன்ன றரும்பொருளை யீட்டுதலுந் துன்பமே**
**பின்னதனைப் பேணுந்தந் துன்பமே—யன்ன**
**தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பால்**
**இழத்தலும் துன்பமே யாம்** — நீதிவெண்பா

அதுமட்டுமா? பொருள் காரணமாக எவ்வளவு பயம்? அரசாங்கத்தில் என்ன காரணம் காட்டி பணத்தை எடுத்துக்கொண்டுவிடுவார்களோ என்ற பயம்? திருடர் வந்துவிடுவாரோ? தீப்பிடித்து விடுமோ? பங்காளிகள் நமக்குப்பின் எடுத்துக்கொண்டு ஓடிவிடுவார்களே என்று பயம். மனிதன் பணத்தை அடையவில்லை, பயத்தைத்தான் அடைகிறான் என்கிறார் மகாவித்வான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்.

**முறை தவிர் கொடுங்கோல் முனிவிற்கு நனியும் அச்சம்;**
**கறை கெழு கரவு செய்வார் கரத்திற்கும் அழற்கும் அச்சம்;**
**மறைவறு தாயமாக்கள் வெளவுவர் என்றும் அச்சம்;**
**அறை பொருள் பெற்றார் அல்லர் அச்சமே பெற்றார்**
**போலும்.**

தாமரையிலுள்ள தண்ணீர் எவ்வாறு சஞ்சலமுடை யதோ அதுபோல வாழ்வும் நிலையற்றதாகும். நீரின் மேலுள்ள இலையை நம்பி அதன்மேல் உருளும் நீர்த்துளி நிலையற்று அலையுமன்றோ? எனவே கவலையே உருவான வாழ்க்கையை உதறி கோவிந்தனின் நாமத்தைக் கூற வேணுமென்கிறார் ஸ்ரீ சங்கராச்சாரியார்.

மனத்தை அடக்கவேண்டும். கவலையும் துன்பமும் நம்மை அடக்கும்படி விடக்கூடாது. சந்தனத்தையள்ளி நம்மீது தெளித்தாலும், சகதியை வாரித்தெளித்தாலும் விருப்பு வெறுப்பு என்பதிருக்கக்கூடாது. நான் என்ற அகந்தையை நீக்கி, கிடைத்தவற்றை உண்டு, நாளைக்கு வேண்டுமே என்ற கவலைக்கு இடம் கொடுக்கக்கூடாது. இதுதான் ஞானியின் இயல்பு.

**புகழ்ந்து நறு விரைக்கலவை பூசிடினும்**
**புல்லியரைப் போல நோக்கி**
**இகழ்ந்து பல பேசிடினும், விருப்பு வெறுப்பு**
**என்ப அவர்க்கு என்றும் இல்லை.**
**அகழ்ந்த மலக் கிழங்கினராய்ப் பசி வேளை**
**கிடைத்தவற்றை அமுதாய்த் துய்த்துத்**
***திகழ்ந்திடுவர்; சிறிதேனும் நாளைக்கு***
**வேண்டுமெனச் சிந்தை செய்யார்.**

— குசேல உபாக்யானம்

வாழ்வு தாமரையின் மீதுள்ள தண்ணீர் போல சஞ்சலமுள்ளதாக, நிலையற்றதாக உள்ளது என்கிறார். அதிலிருந்து மீள்வது எங்ஙனம்? உலகைத் தாமரை இலையாக எண்ணி, நம்மைத் தண்ணீராக எண்ணி, உலகோடு ஒட்டியும் ஒட்டாது போலிருப்பதுதான் வழி.

**நடந்தாலும்; இருந்தாலும்; நவின்றாலும்; துயில் கொண்டு**
**கிடந்தாலும்; விழித்தாலும்; கிளர் முடி மன்னவர் முதலோர்**
**தொடர்ந்தாலும்; தொழுதாலும்; துதித்தாலும்; அவமதித்துக்**
**கடந்தாலும் மெய்ஞ்ஞானி கமல இலைப்புனல் போல்வான்.**

இப்படிப்பட்ட வாழ்வு வாழ ஸ்ரீ குருவருளை வேண்டுவோமாக.

**नलिनीदलगतजलमतितरलम्**
**तद्वज्जीवितमतिशयचपलम् ।**

विद्धि व्याध्यभिमानग्रस्तं
लोकं शोकहतं च समस्तम् ॥

நளினீ தளகத ஜலமதி தரலம்
தத்வத் ஜீவித மதீசய சபலம்
வித்தி: வ்யாத்யபிமான க்ரஸ்தம்
லோகம் சோகஹதம் ச சமஸ்தம்.

தமிழாக்கம்

தாமரையிலேயுறு தண்ணீர்தகுமே
சஞ்சல முறுவது வாழ்விதுவாமே
ஆமிது உலகம் நோயபிமானம்
சோகமிகுவது நீ யிதையறிதி.

## 5. உறவினரின் அபாயம்!

நம்மிடம் செழுமையிருக்கும் போது நம்மைச் சுற்றிச் சுற்றி வந்து புகழ்ந்து, நமக்கு வளம் குறைந்தால், நம் விதியுடன் நம்மைச்சுற்றவிட்டுச் செல்வதனால் உறவினர்களைச் சுற்றத்தார் என நம் முன்னோர்கள் பெயரிட்டழைத்தனர் போலும்! "தண்ணீர் இருக்கும்வரை பறவைகள் தடாகத்தில் இருக்கும். வற்றினால் வேறிடம் தேடிச் செல்லும். அதுபோல் நம்மிடம் செல்வமிருக்கும்போது நம்முடன் இருந்து, நமக்கு சிறிது தளர்ச்சி ஏற்படின் விட்டுச் சென்றுவிடுவார் சிலர்! தண்ணீர் இருந்த காலத்து, நன்கு மலர்ந்த மலர்கள், தண்ணீர் வற்றிய காலத்தில், வாடிவிடும். அதுபோல் நமக்குத் துன்பம் ஏற்பட்ட காலத்தில் நம்மோடுவாடுபவரே உண்மை உறவினர்கள்".

அற்றகுளத்தில் அறுநீர்ப்பறவை போல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டியுறுவார் உறவு.

உலகியல் பற்றி "நம்மை வணங்கி வழிபடவேண்டிய மனைவியும் நம்மிடம் குறை காண்பாள். தாய் தந்தையர் கூட வருந்தும்படி புண்படுத்திப் பேசுவர். மனம் மெலிந்து நம் உருவங்கூட மாறும். கவலை ஏற்படும். புத்தி வேலை

செய்யாது. கல்விகூட மறந்துபோகும். பசியதிகமாகும். உறவுக்காரர் நாம் கேட்ட கேள்விக்குப் பதில் கூற மாட்டார்கள். நாம் ஏதாவது சொன்னாலும் காதில் ஏற்க மாட்டார்கள். எல்லோரும் வேண்டுமென்றே இகழ்ச்சியாகப் பேசுவார்கள். நம்மிடம் செல்வமில்லாத போது மேன்மை குலம், நலம், எல்லாம் நீங்கிவிடும். இறைவனே! உன்னை வணங்கினால் இம்மாதிரி துன்பம் வருமா?" என்கிறார் திருவேங்கடசதக ஆசிரியர்.

துதிக்கின்ற மனைவியும் குறை சொல்வாள்: தந்தைதாய்
சோகமுற வசை கூறுவார்:
துன்பமொடு மனமெலியும்: மேனி வேற்றுருவமாம்
தொலையாத கவலை வளரும்:
உதிக்கின்ற புத்தியும் மழுங்கிடும்: கல்விபோம்
உதரத்தில் அதிக பசியாம்:
உறவின்முறையாரும் ஒருவார்த்தை சொல்லார்:சொன்ன
உத்தரமும் ஒருவர் கேளார்:
விதிக்கின்ற உலகத்தில் எல்லாரு மிகழுவார்:
மிடிவந்து சேர்ந்ததென்றால்
மேன்மையேது? அறிவேது? குலமேது? நலமேது?
வித்தையேது? எவரறிவர் காண்!
மதிக்கின்ற உன்பதம் போற்றில் அவை சேருமோ
மணவாள நாராயணன்
மனதிலுறை அலர்மேலுமங்கை மணவாளனே!
வரத வேங்கட ராயனே. —திருவேங்கடசதகம்

உண்டானபோது உறவுகொண்டு, திண்டாடும் வேளையில் நம்மைக் கைவிடும் உறவினரை நினையாமல், எந்நிலையிலிருந்தாலும் காக்கும் தெய்வமான கோவிந்தனை வணங்கு எனக் கூறுகிறார் ஸ்ரீ ஆசாரியாள்.

यावद्वित्तोपार्जन शक्तः
तावन्निजपरिवारो रक्तः ।
पश्चात् जीवति जर्जरदेहे
वार्ता पृच्छति कोऽपि न गेहे ॥

**யாவத் வித்தோபார்ஜன சக்த:**
**தாவந் நிஜ பரிவாரோ ரக்த: ।**
**பச்சாத் ஜீவதி ஜர்ஜர தேஹே**
**வார்த்தாம் ப்ருச்சதி கோபி ந கேஹே ॥**

தமிழாக்கம்

**உண்டாம் பொழுதுன் உறவினர் சூழ்வர்**
**கொண்டாடுவர் நீ தளர்வுறு தருணம்**
**கண்டாலெவரும் வாரார் மதியார்**
**அந்தோ! உரைதான் புரியவுமுளேயார்.**

## 6. மூச்சுள்ளவரை மூர்த்தி

உயிருள்ளபோது நமக்குள்ள கௌரவம் உயிர் நீங்கியதும் இராது. அவர் இவர் என்றெல்லாம் உயர் திணையாகப் பேசியவர் "அது, இது" என்றெல்லாம் சுட்டிக் காட்டுவார். பிறக்கும் போது நாம் பிறந்து விட்டோமா எனக் கூட்டம் கூடிக் கேட்கக்கூடியவர்கள், நோயுற்றிருக்கிறேமா எனக்காண வருவார்கள். "இன்னும் போகவில்லையா" என்றுகூட சலித்துக்கொள்ளுவார்கள். உயிர் போனதும் பெயர்ச்சொல்லே மாறி "பிணமென்று" அழைப்பர். சுடுகாட்டில் வைத்து, நீரில் மூழ்கியதும் நம்மைப்பற்றி மறந்துவிடுவார். இதுதான் மனிதப் பிறவியின் பெருமை.!

**ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்**
**பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்**
**சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு**
**நீரினில் மூழ்கி நினைப்பொழிந்தார்களே.**
(திருமந்திரம்—*189*)

என்பர் திருமூலர். "இருட்டில் வரும்போது சுடுகாடு வழியாக வரப் பயமாய் இருந்தது. அதனால் காலையிலே புறப்பட்டு வந்தேன்" என்கிறார்கள். இறந்துபோனதும் சுடுகாட்டுக்குத் துணையாக யார் வருகிறார்? தீ வைத்ததும் திரும்பிப் பார்க்காமல் வரவேணுமென்று சாத்திரம் கூறு-கிறதாம். பிறகு நாய் கடிக்கும், நரி இழுக்கும், யாருமே பக்கத்திலிருக்கமாட்டாரே.

எமதெனு மெய் பிறக்குமுன்னெங்கிருந்தது? இன்னுஞ்
சில காலத்து எங்கே செல்லும்?
அமருயிர் நீங்கிய பின்னோர் கணமும் மனை சேயர்
இதன் அருகே நில்லார்
தமர் சவமென்றெடுத்தெரிவார்: பறவை விலங்கினம்
கூடித் தத்திக் கொத்தி
அமர் செய்து புசிக்கும் அப்பொது என்னென்று
கேட்பவர் ஆர் அறிவில் நெஞ்சே. —நீதிநூல்

மனைவியின் பெருமையை "தாய்க்குப் பின் தாரம்" எனக் குறித்தனர். பெண் என்பவள் அன்னை போன்ற கருணையும், அடிமை போன்ற பணிவும், பொன்னெனும் திருமகள் போன்ற அழகும், பூமியைப்போன்ற பொறுமை யுமுடையவள். பெற்ற தாய் தந்தையரைப் பிரிந்து, முன் பின் அறியாது புதிதாகக் கிடைத்த ஆடவனை, மனைவி எனப் பெயர்கொண்டு, கணவனுக்கிக்கொள்ளுகிருள். இது நமது நாட்டின் உயர்ந்த பண்பு. வேறு எந்த நாட்டிலும் இல்லாத சிறந்த நிலை. தனது கணவனது இன்ப துன்பங்களில் பங்குகொள்ளக்கூடிய மனைவிகூட கணவன் இறந்தால் பிணத்தினருகே வரக்கூட அஞ்சு-கிருள். சிலர் தம் உறவினர் உயிருடனிருக்கும்போதுகூட அஞ்சுவதில்லை. செத்த பிணத்தருகில் ஏன் வர அஞ்சு-கிருர் எனப் புரியவில்லை. இப்படி ஆராயும்போது, நம் மரணத்திற்குப் பின் நம் அருமை மனைவியும் மக்களும் நம்முடன் வரப்போவதில்லை. பொருளீட்டி நமக்குச் சிலவு செய்தவர் போய்விட்டாரே எனக் கண்ணீர் விடு-வாரே தவிர நமக்கு இரங்கப்போவதில்லை. இப்படிப் பட்ட மனைவி மக்களை நம்பி இறைவனை மறக்கலாமா?

ஒருயிர் ஈருடல் என்ன நட்டமைந்தர் மாதர் நமது
உயிர் நீங்கில் தம்
ஆருயிரைத் துறப்பரோ? அழுவதும் தம் உணவுவைக்க
அமைந்தபாண்டம்
பேருலகில் உடைந்ததென அழுவதன்றி நமக்கிரங்கும்
பேரிங்குண்டோ?
சாருமிவர் நேயமதால் பவம் செய்து விடிமூத்தல்
தகுமோ நெஞ்சே. —நீதிநூல்

உயிரிருக்கும் வரை உயர்ந்த அன்பு காட்டுவர். உயிர் நீங்கிவிட்டால் கொண்ட மனைவி அருகில் வரக்கூட பயப்படுவாளே! இந்நிலையில் ஆண்டவனைத் தவிர வேறு கதி யார்? எனவே கோவிந்தன் நாமம் கூறு என்கிறர் ஸ்ரீ ஜகத்குரு, ஸ்ரீ குருநாதன் கருணை

यावत्पवनो निवसति देहे
तावत्पृच्छति कुशलं गेहे ।
गतवति वायौ देहापाये
भार्या बिभ्यति तस्मिन्काये ॥

யாவத்பவனே நிவஸதி தேஹே
தாவத்ப்ரிச்சதி குசலம் கேஹே ||
கதவதி வாயௌ தேஹாபாயே
பார்யா பிப்யதி தஸ்மின்காயே ||

தமிழாக்கம்

எதுவரை மூச்சுன துடலில் உளதோ
அதுவரை நலன் அளவளவிடுவாரே
வதுவை செய் பாரியும் வெருவுறும் ஆவி
மாய்வுறு பினருன் பிணமது கணு ரின்.

## 7. எவருக்கு ஆண்டவன் ஈடுபாடு!

"மனிதருக்கு மொத்தம் ஆயுள் நூறு வயது என்றனர். அதில் ஐம்பது வருடம் தூக்கம். குழந்தைப் பருவத்திற்கு பதினைந்து வருடம். பிறகு மூப்பு, நோய், துன்பம் இவற்றிற்கு பாக்கியிருக்கும் முப்பத்தைந்து வயது போத வில்லை. இறைவனே! உன் நாமத்தை ஒருநாள் கூடச் சொல்லமுடியவில்லை. ஆதலால் எனக்கு இப்பிறவி வேண்டாம்" எனப்பாடினர் ஒருபக்த சிகாமணி. விளையும் பயிர் முளையிலே தெரியும் என்பது பதினறு வயதுக்கு உள்ளே மனிதன் எப்படியாகப் போகிறன் என்பது புரியும். இளமையில் மனிதன் சரியாக வளர்க்கப்பெற்றால், சமூகத்திற்கு நன்கு உதவுகிறன் என்பது உண்மை. நன்கு வளர்க்க வேண்டியது பெற்றோர் கடமை. பிள்ளை களின் துன்பம் அல்லது இன்பம் பெற்றோர்கள் குழந்தை களை நடத்தும் தன்மையால் வருவன என்று கூறும் நீதி நூல்.

தீயராய் வறியராய்ச் சிலர் வருந்தலும்
தாயராய்ச் சிலர் புவி துதிக்க வாழ்தலும்
தாயினுல் தந்தையால் சமைந்த தன்மையால்
சேயரை நன்னெறி செலுத்தல் மேன்மையே.

"இளமையில் கல்" என்றபடி, வேறு எந்த விஷயத்திலும் புத்தியைச் செலுத்தாது பதிறுை வயதுக்குள் எல்லா விஷயங்களையும் மனிதர் கற்றுக்கொள்ளவேணும். "பார்வாய் எண்ணெண்கலையும் பதினுறுண்டினில் பயின்ருர்" என்று மாணிக்கவாசகர் வரலாறு கூறுகிறது.

குழந்தைப் பருவம் மாறிக் குமாரப்பருவம் வருகிறது. இவ்வயதில் மனிதனுக்குப் பெண்ணைசை ஏற்படுகிறது. கொடுமையான இந்த ஆசை நிலையிழந்து என்ன செய்கிரேம் என்ன பேசுகிரேம் என்பதை மறக்கச் செய்து தடுமாறச் செய்யும். காமத்தால் இந்திரனும் விசுவாமித்திரர் போன்றவர்களே நிலை தடுமாறினுர்கள். இராவணன் அழிந்தேபோனுன்.

வயதானதும் தனக்கு அழிவு வந்துவிடுமோ, தன் மனைவி மக்களை யார் தனக்குப் பின் யார் காப்பார் என்ற கவலை. அல்லது வயோதிக பருவத்தில் தன்னைக் கை விட்டுவிடுவார்களோ அல்லது இறந்துவிடுவார்களோ என்ற கவலை. குழந்தையில் விளையாட்டிலும், குமரனை பின் பெண்ணைசையிலும், வயது முதிர்ந்தபின் கவலையிலும் கழிக்கும் மனிதன் ஆண்டவனை எங்கே நினைக்க நேரம் என இரங்குகிருர் ஆசாரிய சுவாமிகள்.

அன்னவிசாரம் அதுவே விசாரம்; அது வொழிந்தால்
சொன்ன விசாரம்; தொலையா விசாரம்; நற்ருேகையரைப்
பன்ன விசாரம் பலகால் விசாரம்; இப்பாவிநெஞ்சுக்கு
என்ன விசாரம் வைத்தாய் இறைவா கச்சியேகம்பனே.

என்கிருர் பட்டினத்தார். இவ்வளவு கவலைகளையும் போக்கும் கோவிந்தன் திருநாமத்தைச் சொல்லலாமே என்பது காலடி தோன்றிய கருணையாளரின் புத்திமதி.

बालस्तावत्क्रीडासक्तः
तरुणस्तावत्तरुणीसक्तः ।

वृद्धस्तावच्चिन्तासक्तः
परे ब्रह्मणि कोऽपि न सक्तः ॥

பாலஸ்தாவத க்ரீடா ஸக்த:
தருணஸ்தாவத் தருணீ ஸக்த:
வ்ருத்தஸ்தாவச் சிந்தா ஸக்த:
பரே ப்ரஹ்மணி கோஅபி ந ஸக்த:

தமிழாக்கம் :

குழவியால் விளையாட்டார்வம்; காளை
குமரியிலார்வம் கொள்ளும் வேளை
கிழவன் சிந்தையில் விழுவான் எனினே
பரமனி லார்வம் எவனும் இலனே!

## 8. யார் யாரோ?

குழந்தைகளுக்கு உணவிற்கு ஏற்பாடு செய்வதற்காகக் தன் கணவனைக் கண்ணனிடம் சென்று வருமாறு சுசீலாதேவி கூறினர். மகா உத்தம ஞானியான குசேலர் "நமக்கு எத்தனை குழந்தைகள் என உனக்குத்தெரியுமா? இருபத்தேழு என்று நினைக்கிருய்? முன் எத்தனை பேர் எத்தனை பிறவிகளில் மைந்தர்களாக வந்தார்களோ? இன்னும் எத்தனை பிறவிகள் எடுக்கப்போகிறேமோ? எவர் எவர் மைந்தர்களாக பிறக்கப் போகிருர்களோ? இவர்களைத் தம் மைந்தர் என்பது அறியாமையாகும்.

முன்னம் எத்தனை பேர் மைந்தர் முறைமை
பாராட்டினரோ?
இன்னமும் எத்தனை பேர் மைந்தர் முறைகொள
இருக்கின்ருரோ?
அன்ன மைந்தர் தமைத் தம் மைந்தர் எனல்
அறியாமையாகும்!
மென்னடைக் கரியவாட்கண் விரைக்கருந் தாழ்குழலே!

" அந்தக் குழந்தைகள் யாரோ? நீ யாரோ? இதெல்லாம் பேசும் நான் யாரோ? இவர்களைக் காப்பாற்ற நான் திருமாலா? மக்களின்மீதுள்ள ஆசையால் என்ன என்னவோ பேசுகிருய்? பைத்தியக்காரர் பேச்சு இது. பெரியவர்கள் இப்படி மயங்கமாட்டார்கள்!"

அத்தகு மைந்தர் யார்? நீ யார்? இது உரைக்கும் நானார்?
இத்தரையிடைக் காப்பதற்கு யான் திருநெடுமால் அல்லன்
கொத்துறு மைந்தர் ஆசைக் கோட்பட்டு வருந்துகின்றாய்
பித்துளார் செய்கை யிது! பெரியர் இந்த மயக்கம் பூணார்.

"உலகமென்பது நாடக மேடை. ஆண், பெண் அனைவரும் நடிகர்கள். அவர் அவர் ஆட வேண்டிய பாகம் முடிந்ததும் மறைகின்றனர், தோன்றுகின்றார்" என்பது ஆங்கில அறிஞனை ஷேக்ஸ்பியரின் வாக்கு. "இறைவனே! எத்தனை வீடுகளில் எத்தனை ஊர்களில் பிறந்தேன்? எத்தனை தாய்மார்கள்? எத்தனை தந்தையர்? எத்தனைபேர் என்னென்ன பெயரிட்டு அழைத்தார்களோ? இறைவனே! பிறந்தும் இறந்தும் ஏற்பட்ட களைப்பை நீக்கமாட்டாயோ" என்கிறார் பட்டினத்தார்.

எத்தனையூர்? எத்தனை வீடு? எத்தனை தாய்? பெற்றவர்கள்
எத்தனை பேரிட்டழைக்க ஏனென்றேன்—நித்தம்
எனக்குக் களையாற்றாய் ஏகம்பா! கம்பா!
உனக்குத் திருவிளையாட்டோ.

"எத்தனையோ பேர் எனக்குப் பல பிறவிகளில் தாய் தந்தையராக இருந்தனர். நானும் எத்தனையோ பேருக்குத் தாய் தந்தையாயிருந்தேன். நான் பிறவாத ஊர் கிடையாது. இறவாத ஊரும் கிடையாது. நான் என்னென்ன ஜன்மங்களில் என்னென்னவற்றைச் சாப்பிட்டேனோ? எவர் எவர் என்னைச் சாப்பிட்டார்களோ? இப்படியே நாட்கள் கழிந்துள்ளன."

"எனக்குத் தனித்தனி தாயாராகியும் தந்தையராகியும்
வந்திலாதவரில்லை; யான் அவர்
தந்தையராகியும் தாயாராகியும்
வந்திராததுமில்லை; முந்து

பிறவா நிலனுமில்லை; அவ்வயின்
இறவாத நிலனுமில்லை; பிறிதில
எனைத்தினு உயிர்களும் இல்லை; யானவை
தமைத்தினு தொழிந்ததுமில்லை"

என்கிறது திருக்கழுமல மும்மணிக்கோவை.

எனவே மனைவி மக்கள் யார்? சம்சாரம் என்பதே அதிசயமாய் உள்ளது. நீ யார்? இங்கு எப்படி வந்தாய்? "அந்தப் பரப்பிரம்மமே நீயாக உள்ளாய்" என்ற உண்மையை நன்றாக புரிந்துகொள்" என்கிறார்.

का ते कान्ता कस्ते पुत्रः
संसारोऽयमतीव विचित्रः ।
कस्य त्वं कुत आयातः
तत्वं चिन्तय तदिदं भ्रातः ॥

காதே காந்தா கஸ்தே புத்ர:
ஸம்ஸாரோ அயமதீவ விசித்ர: ।
கஸ்ய த்வம் குத ஆயாத:
தத்வம் சிந்தய ததிதம் ப்ராத: ॥

அத்வைத சித்தாந்தத்தின் சாரமாகிய "தத்வமஸி" என்ற வேதாந்த மகா வாக்கியம் இந்த ஸ்லோகத்தில் அமைந்துள்ளதைக் காணலாம். "தத்துவம் சிந்தனை புரி" என்று அதே பொருளை தமிழாக்கத்திலும் வைத்திருக்கும் அழகு கண்டு மகிழ்க!

யாருன் மனைவி யாருன் மைந்தன்
பேரதிசயமிது ஸம்சாரந்தான்
யார் நீ எங்குற்றனை மெய்ப்பொருணீ
யானுய் தத்வம் சிந்தனை புரிநீ.

## 9. நல்லோரிணக்கம்

"சேரிடமறிந்து சேர்" என்பது வழக்கு. புழுவானது நெளிந்து சென்று ஒரு மலருக்குள் நுழைந்து கொள்ளுகிறது. மலரைப் பறித்து இறைவனுக்கு அருச்சனை செய்கிறோம். புழுவும் சேர்ந்து இறைவனது திருவுருவைத்

தீண்டும் பெரும் பேறடைகிறது. நல்லோரிணக்கம் நன்மையைச் செய்யும் என்பது முதுரை.

**நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலம் மிக்க**
**நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே—நல்லார்**
**குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோ**
**டிணங்கி இருப்பதுவும் நன்று.**

செய்த நன்றியை மறவாதவர்களும், பிறர் செய்யும் குற்றங்களை உடனே மன்னிப்பவர்களும், பிறர் மனைவியை நினையாதவர்களும், கண்டெடுத்த பொருளை யாருடையது என்று தேடிக் கொண்டுபோய்க் கொடுத்தவர்களும், நல்லோர் செய்யும் தருமங்களை ஒழுங்காக நடத்த உதவு பவரும், என்ன நேர்ந்தாலும் பொய் சொல்லாதவரும் நல்லோர். இந்தக் குணங்கள் மனிதனுடைய ஆசைகளை நீக்கும்.

இப்படிப்பட்ட நல்லோரைச் சேர்ந்தால், பாலுந் தேனும் கலந்தாற்போல், ஒன்றாகி நற்குணங்கள் மேற் படும். ஆசைவிடும். ஆசை என்ற பசை நீங்கினால் சலன மில்லாத உறுதியான பக்தி ஏற்படும். நல்லோரின் சேர்க்கை, இறையன்பு முதலானவைதான் முக்கிய-மானவை என்ற எண்ணம் வரும்.

**நல்லாரிணக்கும் நின்பூசை நேசமும் ஞானமுமே**
**அல்லாது வேறு நிலையுளதோ ? அகமும் பொருளும்**
**இல்லாளும் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும்**
**எல்லாம் வெளிமயக்கே இறைவா கச்சியேகம்பனே.**

என்ற உண்மை உணர்வு மேலோங்கும். அற்றது பற்-றெனில் உற்றது வீடு என்பது பெரியோர் கண்ட முறை.

ஆசையற்று, சலனம் இல்லாது, ஞானநிலையில் உயிருடன் முக்தி என்ற ஜீவன்முக்தி நிலை ஏற்படும் வழி கூறுகிறார் ஸ்ரீ ஆதிகுரு. நல்லோரைச் சேர்ந்து, ஆசை களை நீக்கி வாழ்வதுதான் முக்திக்கு வழி என்பது அறிந்-தோம். ஜீவன்முக்தர் எவ்வாறிருக்கவேணுமென்பதை,

அடக்கமும் பொறையும் கருணையும் நண்பும்
அழுக்கறுத்திலாமையும் என்றும்
விடக்கறும் தவத்தோடு ஒருங்குற வளர்ப்போன்
வெகுளியும் காமமும் மயக்கும்
கடக்கரும் தீமை நாடொறும் விளைக்கும்
கயவர்கள் தொடர்ச்சியும் தன்னைத்
தொடற்கரிதாக அடியறக் காய்ந்தோன்
தூயர்க்கும் தூயவன் மாதோ 1

கொழுந்து விட்டெரியும் பசித்தழல் அவித்து
கோதில் வைராக்கியம் மிக்குற்று
அழுந்து பட்டிடாத சாந்திராயணமுன்
அளப்பரும் செயற்கரு விரதம்
எழுந்து விட்டொளிர பற்பகல் ஆற்றி
என்பொடு நரம்புகள் தோன்றிச்
செழுந்தசைவற்றி இளைத்த யாக்கையனாய்த்
திகழ்ந்தனன் சீர்த்தி அந்தணனே: 2

எனக் குசேலர் இருந்த நிலையைக் கூறுகிறார் மகாவித்வான் பிள்ளையவர்கள். அந்நிலை யாவரும் அடையவேணும் என்பது ஆசாரியாள் திருவுளம்.

सत्सङ्गत्वे निःसङ्गत्वम्
निःसङ्गत्वे निर्मोहत्वम् ।
निर्मोहत्वे निश्चलितत्वम्
निश्चलितत्वे जीवन्मुक्तिः ॥

ஸத்ஸங்கத்வே நி:ஸங்கத்வம்
நி:ஸங்கத்வே நிர்மோஹத்வம் ।
நிர்மோஹத்வே நிஸ்சலிதத்வம்
நிஸ்சலிதத்வே ஜீவன்முக்தி ॥

தமிழாக்கம்

சற்சங்கத்தில் சேர் பற்றகலும்
பற்றதுவிலக இற்றது மோகம்

உற்றிடுமத்தருணத்திற் சலனம்
அற்றிடு நிலையின் முத்தச்சீவன்.

## 10. ஏது சம்சாரம்?

காளைப் பருவத்தில்தான் பெண்ணாசை. வயதுமுதிர்ந்த பின் பெண்ணாசை ஒழியும். இது இயற்கை மனிதனுக்குச் செய்யும் நன்மைகளில் ஒன்று. பெண்ணாசை நீங்கும் போது, இருதயத்தில் ஓரிடம் காலியாகவுள்ளது. அங்கு இறைவன் நுழைந்துகொள்கிறான். முதுமை காரணமாக வும், உலக அனுபவம் பெற்ற நிலையில் மனிதனுடைய மனம் ஆண்டவனை நோக்கித் திரும்புகின்றது. இந்த மாதிரி உடலில் தளர்ச்சி ஏற்படுமுன்னமேயே இறைவனை அடைய வழி தேடவேண்டுமென்கிறார் திருமங்கை மன்னன்.

முதுகுபற்றிக் கைத் தலத்தால் முன்னொரு கோலூன்றி
விதிர் விதிர்த்துக் கண் சுழன்று மேற்கிளையோடு இருமி
இது வென்னப்பன் மூத்தவாறு என்று இளையவர் ஏசாமுன்
மதுவுண் வண்டுகள் பாடும் வதரி வணங்குதுமே. (எ–று)

தண்ணீர் வற்றிவிட்டால் ஏரி என்று எவ்வாறு அழைப்பது? ஏரியில் தண்ணீர் இல்லாவிட்டால் பறவைகள் அங்கு வாரா. அதுபோல் நம்மிடம் செல்வம் இல்லாவிட்டால் உறவினர் வரமாட்டார்.

அற்றகுளத்தில் அறுநீர்ப்பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்

என்பது முதுரை. எனவே வயது முதிர்ந்தால் காமமில்லை. நீரில்லாத ஏரிபோல செல்வமில்லாதபோது உறவினர் இல்லை. அதே ஞானம் வந்துவிட்டால் மனைவி மக்கள் என்ற ஸம்ஸாரபந்தமும் கிடையாது.

ஆண்டவனுக்கு வாடாத மலரை அளிப்பதுதான் பெருமை. வாடாத திருவடித் தாமரையில், நாமே, முதுமையால் வாடி இளைப்பதற்கு முன், வாடாத மலராக அவன் திருவடியில் நம்மை ஸமர்ப்பித்துவிட வேண்டு மென்பது குறிப்பு.

वयसि गते कः कामविकारः
शुष्के नीरे कः कासारः ।
क्षीणे वित्ते कः परिवारः
ज्ञाते तत्वे कः संसारः ॥

வயஸி கதே க: காமவிகார:
சுஷ்கே நீரே க: காஸார: ।
க்ஷீணே வித்தே க: பரிவார:
ஞாதே தத்வே க: ஸம்ஸார: ॥

தமிழாக்கம்

வயது முதிர்ப்பிற் காமமும் ஏது?
நீரது வற்றின் ஏரியு மேது?
பொருளது குறையின் உறவெது ஞானம்
தெரிவதனப்புறம் எது ஸம்ஸாரம். 10

## 11. செருக்கையகற்றுக!

மனிதருக்கு மூன்றுவிதமான காரணங்களினால் செருக்கு ஏற்படலாம். செல்வம் காரணமாகச் செருக்கு. செல்லுவோம் என்பதே செல்வமாயிற்று. உன்னை விட்டு நீங்கி விடுவோம். நிரந்தரமாய் இருக்கமாட்டோம் என்பதே செல்வம்.

நவமணிகள் என்பவை கற்கள். பொன் என்பதும் மண்ணிலிருந்து தோன்றும் மண்ணாங்கட்டி. பட்டு என்பது பூச்சியின் குடல். கம்பளி என்பது மிருகத்தின் மயிர். புனுகு, கஸ்தூரி முதலானவை பூனை, மான் முதலானவற்றின் அழுக்கு. பால் என்பது பசுவின் குருதி. தேன் என்பது வண்டின் எச்சில். இவைகளெல்லாம் நிலையானவை என எண்ணி வீண் பெருமை கொள்ளாதே என்கிறார் வேதநாயகம் பிள்ளை.

இடையில் கோவணம் கூட இல்லாமல் வந்தோம். திரும்பிச் செல்லும்போது அப்படியே போகப்போகிறோம். நடுவில் வந்த செல்வம் கண்டு ஏன் கர்வம். கூட வரப் போகின்றதா? ஊருக்குச் சுமை யெடுக்கும் எருது கர்வம் கொள்ளுவது மாதிரி ஏன் கர்வம் கொள்ளவேணும்.

இடையிற் கோவணமின்றி இங்கு உதித்தோம்;
அவ்வாறே
கடையில் வெறுங்கையோடும் கழிகுவோம்;
நடுவிற் சேரும்
உடைமையாற் பெருமை யென்னே? ஊர்க்கெல்லாம்
பொதிசுமக்கும்
விடை தருக்குற்றதென்ன வீண் செருக்குற்ருய் நெஞ்சே.
— நீதிநூல்

ஃ ஃ ஃ

இளமையால் அழகுடனிருக்கிறேமெனச் செருக்கு. "இளமை நிலைக்காதது" என்பதை நினைவில் கொள்ளல் வேண்டும் பிரமாதமாக அணியும் உடைகளையும் நீக்கி வைத்து, நீராடாமல் இரண்டு நாள் இருந்து, நம் உருவத்தைக் கண்ணுடியில் பார்த்துக்கொண்டால், நம் உருவத்தின் கோரமும், நம்மைக்காட்டிலும் அழகானவர் உலகில் உள்ளனர் என்பதும் புரியும். சுடுகாட்டிலுள்ள ஒரு வெள்ளையான தலையைக் கண்டால் ஒருகாலத்தில் நம்மைப்போலிருந்து இவ்வாறு மாறியது என்பது புரியும். அழியக்கூடிய அழகு கண்டு கர்வப்படக்கூடாது.

எழிலுளேமெனச் செருக்குறு நெஞ்சமே!
இழைத்துகில் நீத்து அங்கம்
கழுவிடாதுற நோக்குதி முகந்தன்னைக்
கஞ்சந்தன்னில்! நோக்கின்
எழுநிலத்திடை உன்னின் மிக்காருளரென
அறிவாய்: ஈமத்
தழியும் வெண்டலையுன்றலை போலிருந்து
அவண் உற்றதறிவாயே; —நீதிநூல்

எனவே அழகுடையோம் என்ற செருக்கை நீக்கவேணும்.

ஃ ஃ ஃ

பெரிய மனிதர் உறவினர் என்பதற்காகச் செருக்கு அடையும் செல்வர் சிலருண்டு. அவர் பெரிய மனிதராக இருப்பதால் நாம் எதற்குக் கர்வம் கொள்ளவேணும்! தருமமே உருவமான பெரியோர்களாக இருந்தாலும் செல்வம் வந்துவிட்டபின், தனது முன்நிலை மட்டுமல்ல, மனம் மாறி, நம்மை உறவினர் என்பதையும் மறந்து அலட்சியம் செய்வார். எனவே இந்தவிதமான செருக்கும் உதவாது.

செல்வம், இளமை, உறவு யாவும் ஒரே கணத்தில் மறைந்துவிடும். அவ்வளவும் மாயை. எனவே யாவற்றையும் விட்டு நற்கதி சேரவேணும் என்கிறார் ஸ்ரீ ஆதிசங்கரர்.

मा कुरु धनजनयौवनगर्वम्
हरति निमेषात्कालः सर्वम् ।
मायामयमिदमखिलं हित्वा
ब्रह्मपदम् त्वं प्रविश विदित्वा ॥

மா குரு தனஜந யௌவன கர்வம்
ஹரதி நிமேஷாத் கால: ஸர்வம் ।
மாயாமித மகிலம் ஹித்வா
ப்ரஹ்மபதம் த்வம் ப்ரவிச விதித்வா ॥

தமிழாக்கம்

தனத்தில் இளமை இனத்தில் இவையில்
செருக்கேல் காலம் அழிக்கும் இமையில்
சகமிது மாயா காரியமறிவாய்
சகலம் விடுவாய் பரநெறியடைவாய் 11

## 12. ஆசைப்புயல்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவர்கள் வேடிக்கையாகப் பேசி பக்தர்களுக்கு நல்ல செய்திகளை மனத்தில் பதியும்படி செய்வது வழக்கம். ஒரு ஸமயம் தமிழ் படித்த வித்வான்களுக்கு நடுவில் ஸம்பாஷிக்கும்போது நாள், மாதக் குறிப்புக்களைக் காட்டக்கூடிய ஒன்றிற்கு காலண்டர் (CALENDAR) என்று ஏன் பெயரிடப்பட்டது எனக் கேள்வி கேட்டார். யாவரும் என்ன பதில் கூறுவது என யோசித்தனர். காலன் ஒவ்வொரு நாளாக நம்முடைய வாழ்விலிருந்து கிழிக்கிறான். காலன் நாட்களை "டர்" என்று கிழிப்பதால் காலண்டர் என்று பெயர் வந்தது போலும் என விளையாட்டாகக் குறிப்பிட்டார்களாம். நாள் என்பது போல் காட்டிக் கொஞ்சம் கொஞ்சமாக நமது ஆயுளை வெட்டும் வாளன்றோ!" என்பது வள்ளுவன் வாக்கு.

நாளென ஒன்றுபோல் காட்டி உயிர் ஈரும்
வாள் அது உணர்வார்ப் பெறின்.

"சூரியன் ஓடிவிட்டான். ஒரு நாள் ஓடிவிட்டது. ஆயுள் குறைகிறது. யமன் வந்தால் என்ன செய்வது என ஏன் கவலையடைகிருய்! ஏ! நெஞ்சே! மார்க்கண்டேயன் கதையை மறந்துவிட்டாயா? நாம் "நமச்சிவாய என அவனது நாமத்தை நாடினுல் நல்லது" என்கிருர் ஸ்ரீ ராமலிங்கர்.

ஓடுகின்றனன் கதிரவன் அவன் பின்
    ஓடுகின்றன ஒவ்வொரு நாளாய்
விடுகின்றன என் செய்வோமினி அவ்
    வெய்ய கூற்றுவன் வெகுண்டிடில் என்றே
வாடுகின்றனை அஞ்சலை நெஞ்சே!
    மார்க்கண்டேயர் தம் மாண்பறிந்திலையோ!
நாடுகின்றவர் நாதன்றன் நாமம்
    நமச்சிவாயங்காண் நாம் பெறுந்துணையே.

காடு, செடி, மரம் இவைகளைப் பார்த்து இத்தனை நாள் நிற்குமென்று கூற முடியும். குளத்திலுள்ள தண்ணீர் இத்தனை நாளைக்குத் தாங்குமென்றும் கூறலாம். வீட்டின் கட்டிட அமைப்பை நோக்கி இத்தனை காலம் நிற்கு-மெனச் சொல்லலாம். ஆனல் மனித உடம்பை அவ்வாறு சொல்ல முடியாது.

காடு சேர் மரம் செடி பார்த்து இத்தனை நாள்
    நிற்குமெனக் கணிக்கலாம்: சீர்
நாடு நீர்த்தடம் நோக்கி இத்தனை நாள்
    புனலென்ன நவிலலாம்: ஓர்
வீடுதான் இத்தனைநாள் நிற்கலாமென
    விளம்பலாம்: மெய்யென்னும் பொய்க்
கூடுதான் இத்தனைநாள் நிற்குமெனப்
    புவியில் எவர் கூறற்பாலர்,

இப்படி ஒவ்வொரு நாளும் நமது ஆயுள் குறைந்து கொண்டே வருகிறது. இதற்கு நடுவில் நாம் என்றும் இருப்போம் என்ற எண்ணத்தில் ஆசைக்குட்பட்டு வேண்டாத பொருளெல்லாம் தேடி வீண் காலம் கழிக்காது கோவிந்தனைத் துதிக்கவேணுமென்கிறார் ஸ்ரீ ஜகத்குரு.

दिनयामिन्यौ सायं प्रातः
 शिशिरवसन्तौ पुनरायातः ।
कालः क्रीडति गच्छत्यायुः
 तदपि न मुञ्चत्याशावायुः ॥

*திநயாமின்யௌ ஸாயம் ப்ராத:*
*சிசிரவஸந்தௌ புநராயாத: ।*
*கால: க்ரீடதி கச்சத்யாயு:*
*ததபி ந முஞ்சத்யாசாவாயு: ॥*

தமிழாக்கம்

பகலே இரவே மாலை காலை
 பனி இளவேனில் எனவே காலம்
கொளும் விளையாட்டில் குறையுமுனையுள்
 புயல் நிகராசை அயர்வதுமேயில்: 12

## 13. மாயப்பெருங்கடல்

மனிதனுடைய துன்பங்களுக்குக் காரணம் பற்று. மனைவி, செல்வம் எல்லாம் மாயம் என்பதைப் பெரியோர்கள் அடிக்கடி அறிவுறுத்துவார்கள். பற்றில்லாதவனுக்குக் கவலையே இல்லை. நல்ல மனைவி கிடைக்கவேணுமே யென்ற கவலை. கிடைத்த பின் நன்கு காக்கவேண்டுமே என்ற கவலை. அதற்குப் பொருள் தேடக் கவலை, தேடிய பொருள் பத்திரமாயிருக்க வேண்டுமே யென்ற கவலை. மனைவி நோயுறாதிருக்க வேண்டுமென்ற கவலை. நோயால் பீடிக்கப்பட்டு மறைந்துவிட்டால் நமக்கு யார் கதி என்ற கவலை. நாம் முன்னால் போய்விட்டால் அவளுக்கு யார் கதி என்று கவலை. நமது பொருளை எவர் எடுத்துக் கொள்ளுவாரோ என்ற கவலை. எல்லாவற்றையும் துறந்து இறைவனே கதியென நம்புபவர் உண்மையான செல்வர் என்பர் தணிகைப் புராண ஆசிரியர்.

**மனைக்குரிய மனையாள் தன்னை : வாய்த்த**
**நன்மைந்தர் தம்மை**
**கனைத்தலை சுருட்டும் வேலைக் கடனிகர்**
**செல்வந்தன்னை**
**எனைத்தையும் இலம்பாடென்றே**
**இம்மெனத்துறந்து பெம்மான்**
**தனைச்சரணடைந்துளாரே தனை**
**நிகரில்லாச் செல்வர்.**

கவலை தரும் குடும்பத்தில் பற்றை விட்டு இறைவனை அடைய வழி நல்லோரிணக்கம். ஸமயம் நேர்ந்தபோது நற்புத்தி கூறுவர். நல்லுலகம் கிடைக்க வழி கூறி நரகம் சேராவண்ணம் காப்பார். கற்றுணர்ந்த பெரியோர்களான பொறுமைமிக்க ஸாதுக்களின் நட்பு எவர்க்கும் கிடைப்பதரிதன்றோ!

**சமயம் வரின் இடித்துரைப்பார் :**
**தக்கவழி செலச் செய்வார்**
**இமையவர் தம் உலகுறவும் :**
**இருளுலகம் பகையுமாய்**
**அமைய அறிவுறுத்துவார் :**
**அந்தோ ! நூல் கற்றுணர்ந்த**
**கமையுடையார் நட்பெவர்க்குக் காண் !**
**கிடைக்குமரிதரிது.** —குசேல உபாக்யானம்

ஸாதுக்களின் சேர்க்கை இறைவனின் நாமத்தைப் பாடவைக்கும். இறைவனுடைய நாமம் ஓயாத மாயக் கடலையே கடக்க உதவும். "அப்படிப்பட்ட நாமத்தைக் கூறியே கடல் கடந்து வந்தேன்" என்று அனுமான் சீதாபிராட்டியிடம் கூறுகிறான்.

**சுருங்கிடை! உன் ஒரு துணைவன் தூயதாள்**
**ஒருங்குடை உணர்வினோர் ஓய்வில் மாய்கையின்**
**பெருங்கடல் கடந்தனர் பெயரும் பெற்றிபோல்**
**கருங்கடல் கடந்தனன் காலினால் என்றான்.**
(கம்ப—சுந்தரகாண்டம்)

ஆசையை யொழித்து, நல்லோர் உறவு பூண்டு இறைவனது நாமத்தைச் சொல்லி சம்சாரமான கடலைத் தாண்டலாம் என்கிறார் இப்பாட்டில் ஸ்ரீ ஆதிசங்கரர்.

का ते कान्ता धनगतचिन्ता
वातुल किम् तव नास्ति नियन्ता ।
त्रिजगति सज्जनसङ्गतिरेका
भवति भवार्णवतरणे नौका ॥

கா தே காந்தா தனகதசிந்தா
வாதுல கிம் தவ நாஸ்தி நியந்தா ।
த்ரிஜகதி ஸஜ்ஜன சங்கதிரேகா
பவதி பவார்ணவ தரணே நௌகா ॥

தமிழாக்கம்

மனைவி தனமிவை தனிலுறு கவலை
புயலென் அலைவாய் புகல்வேறிலையோ
சகமூன்றிலுமே சர்ஜனர் நேயம்
சம்சாரக் கடல் தாண்டுமுபாயம். 13

## 14. உண்மைத் துறவு

துறவு என்பது மனத்தின் நெகிழ்ச்சியால் ஏற்படக்கூடிய மாறுதலே தவிர வெளி வேஷத்தினால் காட்டப்படக்கூடியதல்ல. உத்தமத் துறவியாகிய ஸ்ரீ ஜகத்குரு போலித் துறவிகளைக் கண்டிக்கிறார். புனிதமான துறவின் பெருமை வேஷதாரிகளால் கெடுகின்றது என்கிறார்.

பட்டினத்தார் தமது திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் இறைவனைப் பார்த்து "இவ்வுலகத்தில் சிலர் தமது மனைவி மக்களைத் துறந்து, காட்டிலும், மலையிலும் சென்று, வெயில் காலத்தில் நாலுபக்கத்தில் நெருப்பு மூட்டி, மேலிருந்த சூரியனின் வெயில் கொளுத்த, பஞ்சாக்கினியில் நின்றும், மழை, பனிகாலங்களில் தண்ணீரிலேயே கிடந்தும், சடாமகுடத்துடனிருந்தும், தலையை மழித்தும், உடையை நீக்கி அவதூத நிலையென்றும், காய், கனி, கிழங்குகளைச் சாப்பிட்டு, சிறிது சிறிதாக உணவைக் குறைத்து, சருகு தின்று, தண்ணீர் குடித்துக் கடைசியில் வாயுவான காற்றை உண்டும், உப்பான நிலம், மலைப்பாங்கான இடங்களில் தூங்கியும், தளரக்கூடிய உடலைத் தாமே தளர்வித்து, என்றைக்காவது அழியக்கூடிய உடம்பைத் தளரச் செய்து முத்தியடைய முயற்சிக்கின்றனர்.

இது செய்யாது ஏழடுக்கு மாளிகைகளிலும், நந்த வனங்களிலும், குளக்கரையோரங்களிலும், ஏழடுக்கு மாளிகைகளில் அழகிய கட்டில்களில் அருமையான மெத்தைகளில் துயின்று எமது மனைவி மக்களுடன் இன்ப சுகமனுபவித்தோம். நல்ல உணவை உண்டோம். பாடினவர்க்கும், ஆடினவர்க்கும், வாடி வந்தவருக்கும் வரையாது வாரி வழங்கினோம். இவ்வகை இருந்தாலும் " இறைவனே! உன் நாமத்தை மறவாது கூறிக்கொண்டே யிருந்ததினால் அந்த முக்தியையும் இழக்கவில்லை,

**மைந்தரும் ஒக்கலும் மகிழ மனமகிழ்ந்து**
**இவ்வகை யிருந்தோமாயினும் : அவ்வகை**
**மந்திர எழுத்து ஐந்தும் வாயிடைமறவாது**
**சிந்தை நின் வழி செலுத்தலின் அந்த**
**முத்தியும் இழந்திலம்.**

என்றார். போலித் துறவியாக இருப்பதைக் காட்டிலும், இல்லறத்திலேயே இருந்து இறைவனின் நாமம் கூறி நற்கதியடையலாமே யென்கிறார் பட்டினத்தடிகள்.

**காவியுடுத்தும் தாழ்சடை வைத்தும்**
**காடுகள் புக்கும் தடுமாறிக்**
**காய் கனி துய்த்தும் காயமொறுத்தும்**
**காசினி முற்றும் திரியாதே**
**சீவ னொடுக்கம் பூத ஒடுக்கம்**
**தேற உதிக்கும் பரஞான**
**தீப விளக்கங் காண எனக்குன்**
**சீதள பத்மம் தருவாயே.**

என அருணகிரிநாதப் பெருமான் தமது சிதம்பரம் திருப்புகழில் வெளிவேஷமில்லாது ஐம்புலன்களை யொடுக்கி உன் திருவடித் தாமரையைக் காண அருளுவாய்" என்கிறார். போலித் துறவிகளை ஸ்ரீ ஜகத்குரு கண்டிக்கலாம். அது அவருக்கு உரிமை. "காஷாய உடை கண்டால் வணங்கு" என்பது தருமம். எனவே நாம் அந்த உடைக்கு மரியாதை செய்து வணங்குவதே நம் கடமை. போலிக்கும், உண்மைக்கும் வேறுபாடு தெரியாத இக்காலத்தில் நாம் யாரையுமே இகழக்கூடாது. எனவே, நல்ல துறவிகளைக் காட்ட ஜகத்குருவின் அருள் நமக்குத் துணை செய்யுமாக! வேடம் பூண்டவரை

திருவருள் திருத்துமாக! வயிற்றுப் பிழைப்பிற்காகத்துறவு கொள்ளும் துறவிகளைக் கண்டு இரங்குகிறார் ஸ்ரீ ஆசாரியாள்.

जटिलो मुण्डी लुञ्चितकेशः
काषायाम्बरबहुकृतवेषः ।
पश्यन्नपि च न पश्यति मूढः
उदरनिमित्तं बहुकृतवेषः ॥

ஜடிலோ முண்டி லுஞ்சித கேஸ:
காஷாயாம்பர பஹுக்ருத வேஷ: ।
பஸ்யந்நபிச நன பஸ்யதி மூட:
உதர நிமித்தம் பஹுக்ருத வேஷம் ॥

தமிழாக்கம்

சடையே மழித்த பறித்த கேசம்
உடை காவிக்கலை பற்பலவேஷம்,
நடைபயிலா தத்துவ மறிமூடன்
வேடம் பலகுறிதான் வயிறுமென்.

## 15. ஆசை நரைக்கவில்லை

நாளென்பது மனிதனின் ஆயுளைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைக்கும் வாள் என்பர் வள்ளுவர். வீரத்துடன் காளையாயிருந்த நமக்கு வயதாகும்போது வலிமை குறைகிறது. தலைமுடி நரைக்கிறது. அறுபதினாயிரம் வருடம் அரசாண்ட தசரதனுக்கு நரை தோன்றியது பற்றி கம்பன் காவியத்தின் சில பிரதிகளில் ஒரு பாடல் காணப்பெறுகின்றது. "மன்னவனே! உன் மகனுக்கு அரசை அளித்து, நீ தவம் புரிவதற்குக் காடு செல்ல வேண்டிய பருவம் இது" எனக் காதில் கூறுவது போல், காதினருகிலிருந்த ஒரு மயிர் வெளுத்துக் காணப்பட்டது, என்ற கருத்துடன் நரையின் காரணம் காணப்படுகிறது. பிறக்கும் பொழுது நாம் ஒன்றுமே கொண்டுவரவில்லை. போகும்போது கொண்டுபோகப் போவதில்லை. வரும்போது நம் வாயில் பற்கள் இல்லை. போகும் போதும் பல்லில்லாமல்தான் போகிறோம். நடுவில் வந்தது நடுவிலேயே போய்விடும்

என்று ஆண்டவன் காட்டும் அழகு போலும் இது! இப்படிப்பட்ட நிலையில் மனிதன் நினைக்க வேண்டியது. "என்னுடையது, நான்" என்று இல்லாமல் யாவும் இறைவன் தந்தது என எண்ணிப் பற்றில்லாது வாழ வேண்டும் என்று கூறும் நீதிநூல்.

**பூதலம் நம் இல்லம் : வான்மேற்பந்தர்**
**சசிகதிர்மீன் பொற்றீபங்கள் :**
**சீதநீர்க்கடம் : விருட்சாதிகணம் : பூம்பொழில்**
**உலகின் செல்வமெல்லாம்**
**வீதமா : நமது மக்கள் யாவரும் நஞ்சுற்றமென**
**வியந்துன்னுமற்**
**பேதஞ்செய்துழல்கின்றாய் நெஞ்சே!**
**உனைப்போலும் பித்தருண்டோ.**

காளமேகப் புலவர் ஒரு அதிசயப் புலவர். சிலேடைப் புலி என்பர். "மூன்றாவது கால் போன்ற கையில் கம்பை எடுத்து நடப்பதற்கு முன்னால், முன் தலையில் முடி நரைப்பதற்கு முன், காலரான யமதூதரைக் கண்டு பயம் வரு முன், விக்கி இருமல் வந்து வழக்கமாகச் செல்லும் சுடு காடு செல்லாமுன், காஞ்சிபுரத்தில் ஒரு மாமரத்தடியில் இருக்கும் ஏகாம்ரநாதரை வணங்கு" என்று பாடுகிறார். பாட்டிலேயே முக்கால், அரை, கால், அரைக்கால், மாகாணி முதலான பின்ன எண்களை வைத்துப் பாடி யிருப்பது விநோதம்.

**முக்காலுக்கேகாமுன் முன்னரையில் வீழாமுன்**
**அக்காலரைக் கால்கண்டஞ்சாமுன்—விக்கி**
**இருமாமுன் மாகாணிக்கேகாமுன் கச்சி**
**ஒருமாவின் கீழரை யென்றோது.**

எனவே வயது முத்தால் ஆசையை விட்டு இறைவனை தியானிக்கவேண்டும். மூப்பு வந்தும் சிலர் ஆசைகளை விடாதிருக்கின்றார்களே என கருணையுள்ளம் கொண்ட ஆசாரியாள் இரங்குகிறார்கள்.

अङ्गम् गलितम् पलितम् मुण्डम्
दशनविहीनम् जातम् तुण्डम् ।

वृद्धो याति गृहीत्वा दण्डम्
तदपि न मुञ्चत्याशापिण्डम् ॥

அங்கம் கலிதம் பலிதம் முண்டம்
தசனவிஹீனம் ஜாதம் துண்டம்
வ்ருத்தோ யாதி க்ருஹீத்வா தண்டம்
ததபி ந முஞ்சத்யாசா பிண்டம்

தமிழாக்கம்

தளர்வுறு முடலன் தலை நரையுடையன்
தந்தமிலா வாயுங் கொளுமுதியன்
கரமுறு தடிதுணையாக நடப்பான்
கழிபெருமாசைகளை விடமாட்டான். 15

## 16. உபயோகமில்லா உடல்

தக்கது இன்னது, தகாதது இன்னது என அறியும் ஆறுவது அறிவாகிய பகுத்தறிவை ஆண்டவன் மனிதனுக்கு அளித்திருக்கிறான். மற்ற எல்லா உயிர்களும் நான்கு கால்களை ஊன்றி தரையை நோக்கிக் குனிந்து நடக்குமாறு செய்த இயற்கை, மனிதனை மட்டும் உயர்வானவன் என்று காட்டுவதுபோல், இரண்டு கால்களில் நடக்கச்செய்து, தலை நிமிர்ந்து நிற்கச்செய்துள்ளது போலும்! இதையறியாத மனிதன் ஒரேயடியாகத் தன் அடக்கத்தை விட்டுத் தலைநிமிர்ந்து தருக்கடைகிறான். அவனையறியாமல், இவ்வுடம்பு உயர்வானது என்ற எண்ணம் மறைந்து, இவ்வுடல் மட்டுந்தான் உயர்வானது. இதைக் காப்பது மட்டுந்தான் நம் கடமை என்று எண்ணி விடுகிறான். உடல் என்பது ஆண்டவன் கோயில் கொள்ளுதற்காகப் படைத்த ஒரு ஆலயம் என்பதை மறந்துவிடுகிறான். சரியாகப் பயன்படாத மனித உடல் எதற்குப் பிரயோசனம்?

மாடு, ஆடு போன்ற மிருகங்கள் இறந்தால் அவைகளின் மாமிசம், தோல், கொம்பு, எலும்பு முதலானவை பிறருக்கு உதவும். மண்பாண்டம் உடைந்தால் ஓடு உதவும். மரமும் கல்லும் கட்டாயம் உதவும், வீடு

இடிந்தால் அதன் செங்கல், மேற்கூரை முதலானவை உதவும். காடழிந்தால் விறகு கிடைக்கும். இந்த உடம்பு அழிந்தால் எதற்கு உதவும்? எனக்கேட்கிறது நீதிநூல்.

மாடு ஆடு விலங்கு இறப்பின் தசை மயிர்
தோல் கொம்பு உதவும்; மட்கலந்தான்
ஓடாக உடையின் ஒன்றுக்கு உதவும்;
வீழ் மரம் கல் உபயோகந்தான்;
வீடானது இடியின் மேற்பொருள் உதவும்;
காடழியின் விறகாம்; மாயக்
கூடாகும் தேகமிது வீழின் எதற்கு
உதவும் நீ கூருய் நெஞ்சே.

வயது முதிர்ந்து தள்ளாமை வந்து வறுமையும் சேர்ந்து கொள்கிறது. உடலின் மீது பற்று விடவில்லை. குளிர் காலம் தேகம் நடுங்குகிறது. கிடைத்த இடத்தில் நெருப் பண்டை சென்று குளிர் காய்கிருன். நெருப்புக் கிடைக் காவிடில் காத்திருந்து சூரியன் வந்தபின் வெய்யிலில் குளிர் காய்கிருன். குளிரில் காலே நீட்டிப் படுக்கமுடியாது. சுருண்டு ஒடுங்கித் தூங்குகிருன். பிச்சை எடுத்து உண்டு மரத்தடியில் வசிக்கிருன். எனினும் கிடைக்க முடியாத செல்வத்தின்மீது ஆசைகொண்டு அல்லல் படுகிருன். பணக்காரன் போதுமென்ற எண்ணம் வராது ஆசைப் பட்டு அழிகிருன். ஏழை கிடைக்கவில்லேயே என ஏங்கி அழிகிருன். எனவே எந்நிலேயிலிருந்தாலும் ஆசைதான் அழிவிற்கே காரணம். ஆசையை விட்டு ஆண்டவனே நினே என்கிருர்.

अग्रे वह्निः पृष्ठे भानुः
रात्रौ चुबुकसमर्पितजानुः ।
करतलभिक्षस्तरुतल वासः
तदपि न मुञ्चत्याशापाशः ॥

அக்ரே வன்னி: ப்ரீஷ்டே பானு:
ராத்ரௌ சுபுக ஸமர்ப்பித ஜானு: ।
கரதல பிக்ஷஸ் தருதல வாஸ:
ததபி ந முஞ்சத் யாசாபாச: ॥

6

தமிழாக்கம்

முன்பின் தீ வெய்யிலிற் குளிர் காய்ந்தும்
மோவாய் முழங்கால் மேவத் துயின்றும்
தன்கைப் பிச்சை தின்றுந் தருநிழல்
வாசம் செயினும் ஆசைகளேவதில் 16

## 17. என்ன பிரயோசனம்

எல்லா நதிகளும் கடலில் வந்து விழுவதால் கடலில் நீராடினால் எல்லா நதிகளிலும் நீராடிய புண்யம் கிட்டும் என்பது திருவிளையாடற் புராணமுடையார் வாக்கு.

**திருத்த யாத்திரை யதிகம்; அவற்றதிகம் சிவனுருவாந்**
**திருத்தமாம் கங்கை முதல் திருநதிகள் தனித்தனி போய்த்**
**திருத்தமாடுவது அரிது; அத்திருநதிகள் அவைவந்து**
**திருத்தமாய் நிறைதலினால் அவற்றதிகம் திரைமுந்நீர்**

திருவிளை - ஏழுகடலழைத்தது.

கங்கையில் நீராடுவது சிறப்புடையது. கங்கையில் நீராடி காசியில் இறப்பது மிக மிக மேன்மையானது என்பர். தீர்த்தயாத்திரைக்குப் பெரியோர்கள் முறை வைத்துள்ளனர். "நல்வழியிலே ஈட்டிய பொருளை எடுத்துக்கொண்டு, பிறர் பொருளை மோசம் செய்யாத நிலையில், காடுவழி நடந்து, வழியில் பசி, நோய் பனி முதலானவற்றால் பிடிக்கப்படாமல், நடுவில் காய்ச்சல் காரணமாக இறவாமல் உயிருடன் காசியை அடைதல் வேண்டும்" என்கிறார் குமரகுருபரர்.

கடலில் நீராடவும், கங்கையில் நீராடவும் சிலர் செல்லுவர். நிறைய விரதமிருப்பார். தானம் தருமங் களைச் செய்வர். "என்னுடையதல்ல" என்ற மமகாரத்தை நீக்குவதே தானத்தின் பயன். எவ்வளவு செய்தாலும், நல்லறிவில்லாமல், பக்தியில்லாமல் யந்திரம்போல் இவற்றைச் செய்வதில் என்ன பயன்?

ஈசன் ஒருவன் எங்கும் நிறைந்துள்ளான். அவன் அருள் பெற வேணுமென்ற எண்ணமில்லாதவர் கங்கை-யிலோ, காவிரியிலோ, கன்யாகுமரி கடலிலோ ஆடினாலும் என்ன பயன் என்பர் அப்பர்.

கங்கையாடில் என்? காவிரியாடில் என்?
கொங்குதண் குமரித் துறையாடில் என்?
ஓங்குமாகடல் ஓத நீராடில் என்?
எங்கும் ஈசன் என்னாதவர்க்கில்லையே.

மேலும் கூறுவார் அப்பர் பெருமான்: "கோடி புண்ணிய தீர்த்தங்களை குடத்தில் சேர்த்து வைத்து நீராடினாலும் இறைவனுக்கு அன்பில்லாதவர் செய்யும் புண்ணியம், ஓடக்கூடிய நீரை ஓட்டைக் குடத்தில் வைத்தால் வழிந்து ஒழுகுவது போல் வீணாகிவிடும்."

கோடி தீர்த்தம் கலந்து குளித்தவை
ஆடினாலும் அரனுக்கன்பில்லையேல்
ஓடுநீரினை ஓட்டைக் குடத்தட்டி
மூடிவைத்திட்ட மூர்க்கனொடொக்குமே.

எனவே தீர்த்தயாத்திரை, தான தருமம் செய்தல் ஞான மில்லாது செய்வதில் பயனில்லை. ஞானம் பெற இறைவனை தியானிக்க வேணும். தியானத்தின் முதற்படி இறைவன் நாமம் கூறுதல். ஆதலால் கோவிந்தனை நினைந்து நாமம் கூறி வணங்குக என்கிறார் ஸ்ரீ ஆதிகுரு. உடலும், உள்ளமும் கலந்து செயலாற்றவேண்டு-மென்பது குறிப்பு.

कुरुते गङ्गासागर गमनम्
व्रतपरिपालनमथवा दानम् ।
ज्ञानविहीनः सर्वमतेन
मुक्तिं भजति न जन्मशतेन ॥

குருதே கங்கா ஸாகர கமனம்
வ்ரதபரிபாலனமதவா தானம் ।
ஞானவிஹீன: ஸர்வமதேன
முக்திம் பஜதி ந ஜன்ம சதேன ॥

தமிழாக்கம்

சாகரம் கங்கை ஏகுவன் நோன்பு
தகவுற நோற்பன் தானம் தருவன்
ஞானமிலாதவன் நூறுபிறவியில்
வீட்டையானிது நாடரியுண்மை,

## 18. ஞான பேரிகை!

துறவின் பெருமை கூறவந்த குமரகுருபர சுவாமிகள் "இல்லறத்தின் தம் கடைமைகளைக் குறைவற முடித்து, எல்லா வித்தைகளையும் நன்கு பயின்று, பொருளும், இன்பமும் வேண்டாமென வெறுத்து, அருள், பொறுமை, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, தவம் முதலான நற்குணங்கள் நிரம்பியவனாய், ஓரறிவுயிரான புல்லுக்கும் மரத்திற்கும்கூட கருணைகாட்டு மனத்தோனாய், கால் நடையாக நடந்து, தோலுடையுடன், உடல் இளைத்தவனாய், மலையிலும், காட்டிலும் நுழைந்து, சருகும், தண்ணீரும் உணவாகக்கொண்டு, பனிக்காலத்தில் குளிர்ந்த நீரில் நீராடி, வேனிற்காலத்தில் நாலு பக்கத்திலும் தீ மூட்டி, மேலேயிருந்து சூரிய வெப்பம் தன்னைத் தாக்கி பஞ்சாக்கினி மத்தியில் தவமிருப்பான்" என்றார்.

ஞானியின் தேவைகள் குறைவானவை. ஏன்! ஞானி என்பவன் தனக்குத் தேவைகளே யற்றவன் எனக்கூடக் கூறலாம்.

"உடை கோவணமுண்டு : உறங்கப்புறம்
திண்ணையுண்டு : உணவிங்கு
அடை காலையுண்டு : அருந்தத் தண்ணீருண்டு :
அருந்துணைக்கே
விடையேறும் ஈசர் திருநாமமுண்டு"

என்பதுதான் ஞானியின் உண்மையான உத்தமமான நிலை

ஆடுவார் : உன்மத்தர்போல் திரிவார் :
நகைத்திடுவார் : அங்கை கொட்டிப்
பாடுவார் : இன்றிருந்த இடம் நாளை
இருக்க மனம் பற்றார் : சுற்றிக்
கூடுவோர் தம்மிற்கூடார் : கந்தை
யன்றி வேறுடுக்கை கொள்ளார் : அன்னார்
நீடுவார் புகழ்பெருமை இற்றென்று
மதிப்பவரார்? நிகழ்த்துவாரார்?

என்கிறது குசேலோபாக்யானம். ஆசையை விட்ட ஞானிகளுக்குள்ள இன்பத்திற்கு யார் உவமை கூற முடியும் என்பர் திருமூலர்.

ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள்
ஈசனொடாயினும் ஆசையறுமின்கள்
ஆசைப்படப்பட ஆய்வருந்துன்பங்கள்
ஆசைவிடவிட ஆனந்தமாமே. —திருமந்—2570

ஆலயத்தையும், மரநிழலையும் இருப்பிடமாகவும், தரையையே படுக்கையாகவும், மான்தோலையே ஆடையாகவும் கொண்டு, எல்லாவிதமான சுகபோகங்களையும் தியாகம் செய்த ஞானியின் இன்பநிலையை யாருமே கூறமுடியாது என்கிறார் உத்தம ஞானியாகிய ஸ்ரீ சங்கரர்.

सुरमन्दिरतरुमूलनिवासः
शय्या भूतलमजिनम् वासः ।
सर्वपरिग्रहभोगत्यागः
कस्य सुखम् न करोति विरागः ॥

ஸுரமந்திர தருமூல நிவாஸ:
சய்யா பூதலமஜினம் வாஸ: |
ஸர்வபரிக்ரக போகத்யாக:
கஸ்ய ஸுகம் ந கரோதி விராக: ||

தமிழாக்கம்

ஆலயம் மரநிழல் வீடமளிதரை
ஆடைகளணிவது மானுரிதனதரை
ஆசைகள் போகம் தியாகம் புரியும்
அவர்நிகரும் சுகம் அடைவதில் எவரும். 18

## 19. ஞானராஜா!

காட்டில் வசித்து, காற்றைப் புசித்து, கந்தையணிந்து ஓட்டிலே பிச்சை யெடுத்து உண்டு, உண்மை பக்தி இல்லாதவர் என்ன செய்தாலும் என்ன பயன்? உண்மை அன்பர் பெண்ணோடு வாழ்ந்தால்கூட, மனம் இறைவனிடம் இருந்தால் உண்மை ஞானியாவான்! என்பர் பட்டினத்தார்.

காடே திரிந்தென்ன? காற்றே புசித்தென்ன?
கந்தை சுற்றி
ஓடே எடுத்தென்ன உள்ளன்பிலாதவர்?
ஓங்கு விண்ணோர்
நாடே இடை மருதீசர்க்கு மெய்யன்பர்
நாரியர்பால்
வீடே யிருப்பினு மெய்ஞ்ஞானவீட்டின்ப
மேவுவரே.

ஞானிகள் என்ன செய்துகொண்டிருந்தாலும், மனத்தை இறைவனை விட்டு விலக்கமாட்டார்கள். வேலைக்காரி யொருத்தி குடத்தில் நீர் நிரப்பித் தலையில் சுமந்து வரும்போது என்ன பேசினாலும், எவ்வளவு ஆடிப்பாடி வந்தாலும் குடத்தை விழாமல் காத்துக் கொள்ளுவது போல அவ்வளவு கவனமாயிருப்பார்கள் என்கிறார்.

எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப்பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே—வித்தகமாய்க்
காதி விளையாடியிருகை வீசிவந்தாலும்
தாதி மனம் நீர்க்குடத்தே தான்.

ஞானி தன் தவநிலையால் பயமில்லாதவனாகி, பொய்யாகிய பாம்பை அடித்து எறிந்துவிட்டான். வேதநெறி நிற்கத் தொடங்கிவிட்டான். மரணப்ரமாதம் நமக்கில்லை என்ற முறையிலே மரணபயத்தையும் வென்றுவிட்டான்.

எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
அங்கங்கிருப்பதும் நீயன்றோ பராபரமே.

என்று உலகையே ஆண்டவன் மயமாகக் கண்டு ஆனந்திக்கிறான்.

எந்த நிலையிலும் இறைவனையே நினைப்பதுவும், காண்பதுவும் ஆனந்த நிலையன்றோ! நரிகள் "ஓ" என ஊளையிட "சம்போ" எனச் சிவநாமம் கூறியதாக எண்ணினான் வரகுணபாண்டியன். தவளைகள் "கரகர" என்று சத்தமிட "ஹர ஹர" எனச் சிவநாமமாக அவன் காதுகளிலே விழுந்தது அந்தச் சத்தம். வேப்பமரத்தில் இருந்து பழுத்த வேப்பம் பழங்கள் கீழே மணலில்

விழுந்து, பாதி மணலுக்குள்ளும், பாதி வெளியேயும் நிற்பது கண்டு சிவலிங்கமென எண்ணி வணங்கினான். இறைவனையே எண்ணக்கூடியவருக்கு எதுவும் இறைவனாகவே காணப்படும். இந்த இன்பத்திற்கு ஈடிணையேது! இப்பேர்ப்பட்ட ஒருமைப்பாட்டை அடைபவரே ஞான அரசராக விளங்குவர் என்பது ஞானராஜராகிய சங்கரரின் திருவுள்ளம்.

योगरतो वा भोगरतो वा
सङ्गरतो वा सङ्गविहीनः ।
यस्य ब्रह्मणि रमते चित्तम्
नन्दति नन्दति नन्दत्येव ॥

யோகரதோ வா போகரதோ வா
சங்கரதோ வா சங்கவிஹீன: ।
யஸ்ய ப்ரம்மணி ரமதே சித்தம்
நந்ததி நந்ததி நந்தத்யேவ ॥

தமிழாக்கம்

யோகம் செயினும் போகம் கொளினும்
கூடுறுவேயல தேகன் உறையினும்
நெஞ்சம் பரமனில் நிலைகொள உறுவன்
இன்பம் இன்பம் இன்பம்தானே. 19

## 20. யமன் என்ன செய்வான்.

தளர்ந்திருந்த அருச்சுனனின் தளர்ச்சி நீங்குமாறு, அவனது கடமையை உணர்த்துவதற்குக் கண்ணன் உபதேசித்த பகுதியே பகவத்கீதை எனப்படும். வேதத்தைப் பசுவாகவும், கண்ணனைப் பால் கறக்கும் இடையனாகவும், அர்ச்சுனன் கன்றாகவும், கீதை உபதேசத்தைப் பாலாகவும் உவமிப்பர். தினமும் நீராடினால் உடற் சுத்தம் பெறுவோம். கீதையெனும் தண்ணீர் நமது ஆணவம் முதலான மலங்களைக் கழுவும். எல்லா நூல்களின் தத்துவங்களும் கீதைக்குள் அடங்கும். தேவர்கள் திருமாலுக்குள் அடங்குவர். பெரியோனை திருமால் தன் வாக்கினால் பூராவும் கூறிய நூல் கீதை. இது ஒரு தனிச் சிறப்பு என்பர்.

**கீதையொன்றே கற்றற்கு உரித்தாகும் : மற்றவற்றால்**
**யாதும் பயனில்லை : என்னென்னில்—தாதவிழும்**
**தாமரைக்கொப் பூமுடையான் தண்கமல வாண்முகத்தில்**
**தோமறவே தோன்றிடலால் ஆங்கு.**

என்பது பெரியோர் வாக்கு. இத்தகைய கீதையில் ஒரு சிறிதாவது பாராயணம் செய்தல் வேண்டும். கீதை ஓதுமிடத்தில் துணையில்லாருக்கு துணை கிட்டும். கீதை கற்பிப்போர், கற்பவர், கீதையின் ஓசை கேட்குமிடத்தில் நானிருப்பேன் என்கிறார் கண்ணபிரான்.

**கீதைதனை ஓதுமிடம் கிட்டும் துணை விரைவில்**
**ஏதமறக் கற்றுக்கற் பிக்கவரும்—நாதமது**
**கேட்குமிடம் எல்லாமே கேளாய் புவியணங்கே**
**நீக்கமற நானிருப்பேன் நின்று.**

—பகவத்கீதா மான்மியம் வராகபுராணம்.

கீதையை யோதுவதுடன் கங்கை நீரைப் பருகுவது விசேடம் என்கின்றார். காசியை நோக்கிப் புறப்படும் கால்களும், காசியின் பெருமை கூறும் நாவும், காசியின் பெருமை கேட்கும் செவிகளும், காசியைக் காணும் கண்களும் பெரும் புண்ணியம் செய்தவை. காசியிலுள்ள கங்கையின் பெருமையைக் கூறுங்கால் கண்டாலும், அனுட்டானம் செய்தாலோ, தொட்டாலோ, நற்கதி பெறுவர். கங்கையில் முழுகிக் கோயிலை வலம் வந்து சிவபெருமானை வணங்கி ஒரு நொடியாகிலும் மண்டபத்தில் இறைவனை வணங்கினவர் சொல்லமுடியாத பேரின்ப வீடடைவர் எனக் கூறுகிறது காசிக்காண்டம் என்ற நூல்.

**கடவுட் கங்கைப் பேரியாறு காணில் : ஆடில் :**
**கடன் கழிக்கில் :**
**தொடில்வானெறி சென்றடைந்திடுவர் :**
**சூழ்ந்து கோயில் வலம் வந்து**
**முடியாற்காசி முழுமுதலை வணங்கி**
**முத்திமண்டபத்தோர்**
**தொடியாயினும் உள்ளுறைந்திடுவோர்**
**துவலற்கரிய வீடடைவர்.**

இப்படிப்பட்ட பெருமையுள்ள கங்கை நீரை ஒரு துளி யாவது பருகவேண்டும்.

கீதையையும் ஓதிக் கங்கையையும் துளி பருகிக் கண்ணனது நாமத்தையும் ஜபம் செய்யக்கூடியவனுக்கு யமபயம் கிடையாது என்கிறுர் ஆசாரிய சுவாமிகள்.

भगवद्गीता किंचिदधीता
  गङ्गाजललवकणिका पीता ।
सकृदपि येन मुरारि समर्चा
  क्रियते तस्य यमेन न चर्चा ॥

பகவத்கீதா கிஞ்சித் அதீதா
  கங்காஜல லவ கணிகா பீதா ।
ஸக்ருதபி யேன முராரி ஸமர்ச்சா
  க்ரியதே தஸ்ய யமேன ந சர்ச்சா ॥

தமிழாக்கம்

பகவத் கீதை சிறிதோதுமவன்
  பனிநீர்க்கங்கை யொர்துளி பருகுமவன்
பரமன் திருமாலடி பரவுமவன்
  பயமுற வேண்டா இயமன் கலகம் 20

தொண்டரடிப்பொடியாழ்வார் "ஐம்புலன்களை யடக்கி, கலிபுருஷனை வென்று, யமன் தலையில் ஏறி நின்று எக்காளமிடுகிறேன். இறைவனே! உனது நாமசங்கீர்த்தனம் செய்ததால் ஏற்பட்ட எக்காளத்தின் பயனே இது" என தமது முதல் பாட்டில் கூறிய கருத்து பஜகோவிந்தம் இப்பாடலில் காணப்பட்டு ஈசுவர நாம பஜனையின் பலன் கூறியது கண்டோம்.

## 21. கண்ணா! எனைக்கா!

இறைவஞன நாராயணன் தனது வைகுண்டத்தை விட்டுப் பத்து முறைகள் இறங்கி வந்தான். கிணற்றுக் குள்ளே விழுந்த குழந்தையை மீட்பதற்காகத் தாய் தானும் கிணற்றுக்குள்ளே குதிப்பது போலே, நம்மைக்

காப்பதற்காகத் தானும் நம்மைப்போல் இராமன், கிருஷ்ணன் என்ற பெயர் கொண்டு பிறந்தான். தனது திருவடியை வணங்கக்கூடியவரைப் பிறப்பறுக்கும் பெருமான் தானே வந்து பிறந்தான் என்பர் கம்பர்.

**விண்டு பிறந்தனன் தன் பொற்பாதம் ஏத்துவார்**
**பிறப்பறுப்பான்.**

—(கம்பராமாயணம்—சுந்தரகாண்டம்)

இறைவன் பிறப்பது நம்மைக் காப்பதற்காக — ஆனால் நாம் ஏன் பிறக்கிறோம்?

நமது தீய செயல்களால் ஏற்படும் நமது பாவங்களை அனுபவிப்பதற்காக நாம் பிறக்கிறோம். நற்குணத்துடன் இறைவனை வணங்கித் தஞ்சம் புகுந்தால் இறைவன் பிறவாமல் காக்கிறான். வேற்றோர் மனைவியர் தோற்றம் புகழ்வது, பொய் கூறுவது, வேண்டாத நட்புமாதிரியான குற்றங்கள் புரிந்தவுடன் நம்மை இறைவன் கருப்பாசயம் என்னும் இருட்டறையில் அடைக்கிறான். குடலென்னும் சங்கிலி கொண்டு பிணைக்கிறான். கிடத்தல், நிற்றல், நடத்தல் இல்லாத இடங்குறைந்த வாயிலில், உதரமாகிய நெருப்பிலே பதைபதைக்குமாறு சிறையிடுகிறான். பிறந்தவுடன் வெளிவந்ததும் நாம் நன்கு நடந்துகொள்ள வேண்டும். இல்லாவிட்டால் மீண்டும் பிறக்கநேரும்.

இறைவனது நாமத்தைக் கூறினால் இறக்கவும் வேண்டாம். பிறக்கவும் வேண்டாம். பிறப்பு, இறப்பு என்று ஊசலாடுகிறோம். இறைவனுக்கு நம் நெஞ்சையே ஊஞ்சல் பலகையாக்கி, கருணையெனும் கயிறுகொண்டு கட்டி, இறைவனை எழுந்தருளச் செய்து அவனை ஊஞ்சலாட்டி அகங்குளிரக் கண்டோமென்றால், நாம் ஊசல் படுவது ஒழியும் என்பது பரமகாருணிகரான ஸ்ரீ திவ்ய கவி பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் வாக்கு.

**உருமாறிப்பல பிறப்பும் பிறந்தும் செத்து**
**மூசலாடுவ தடியேன் ஒழியும் வண்ணம்**
**கருமாயத்தென் நெஞ்சைப் பலகையாக்கிக்**
**கருணையென்னும் பாசத்தைக் கயிறுப்பூட்டி**
**மருமாயத்துளவசைய ஆடிரூசல்!**
**மணிமகரக் குழையசைய ஆடிரூசல்!**
**திருமாது புவிமாதோ டாடிரூசல்**
**திருவரங்க ராசரே ஆடிரூசல்!**—அஷ்டப்ரபந்தம்

வேதாந்த வழி நடந்தால் பிறவியை ஒழிக்கலாம்.

**ஈசனையே துதித்தல்: அவன் திருநாமத்தோடு**
**திருநாளினைக் கொண்டாடல்:**
**நேசமார் அனைதந்தைதனை வணங்கல்: கொலை**
**செய்யாமை: நிதம் காமத்தை**
**நாசமாக்குதல்: களவு பொய் நீக்கல்**
**பிறனில்: மது: நயந்திடாமை:**
**மாசறுமிவ்விதி பத்தும் வேதாந்த**
**மெனக்கடவுள் வகுத்திட்டானல்.** —நீதிநூல்

மீண்டும் பிறந்தும், இறந்தும் ஸம்ஸாரக் கடலில் உழலுகிறோம். ஸம்ஸாரம் என்பது ஒரு கடல். அதில் உள்ள ஒரு கப்பல் இறைவன். நாம் எல்லாம் காக்கைகள். கடல் நடுவிலுள்ள கப்பலில் அமர்ந்துள்ள காக்கை, கரையை நோக்கி வர முயற்சி செய்து முடியாது, கடைசியாக கப்பலையே அடைகிறது. அதுபோல் நாமும் இன்பமான கரையை அடைய வேண்டுமென்றால் நாமாகச் செல்ல முடியாது. கப்பலென்னும் கடவுளின் மீது நம்பிக்கை வைத்து ஏறிக்கொள்ள வேண்டும் என்பர் குலசேகராழ்வார்.

**எங்கும் போய்க் கரைகாணது எறிகடல் வாய் மீண்டேயும்**
**வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே.**

எனவே பிறவி-மறைவில்லா வண்ணம் ஸம்ஸாரமென்னும் கடலிலிருந்து தன்னைக் காக்குமாறு வேண்டுகிறார் ஸ்ரீ சங்கரர்.

पुनरपि जननम् पुनरपि मरणम्
पुनरपि जननीजठरे शयनम् ।
इह संसारे बहुदुस्तारे
कृपयापारे पाहि मुरारे ॥

புனரபி ஜனனம் புனரபி மரணம்
புனரபி ஜனனீ ஜடரே சயனம் ।
இஹ ஸம்ஸாரே பஹுதுஸ்தாரே
க்ருபயாபாரே பாஹி முராரே ॥

தமிழாக்கம்

**மீண்டும் பிறவி மீண்டும் சாவு**
**மீண்டும் தாயின் கருவில் தாவு**
**தாண்டரி கரையில் ஸம்ஸாரக் கடல்**
**கண்ணவெனேக்கா தண்ணளி வைத்தாள். 21**

## 22. எளிய வாழ்வின் ஏற்றம்

செந்தமிழ்ச் செல்வராகிய குமரகுருபரர் இறைவனிடம் வரங்கேட்கின்றார். "தாங்கமுடியாத குளிருக்கு நிறையத் தையலிடப்பட்ட பழைய துணி ஒன்று வேண்டும். படுத் துறங்குவதற்கு சிறிதொரு திண்ணை வேண்டும். கொடிய பசிக்கு உப்பில்லாத கஞ்சி தவிர எது கேட்டாலும் யாரும் கொடுக்கக்கூடாது. உன்னுடைய அடியாருடன் சேர்க்கை வேண்டும். என் உயிர் நீங்கும் வரை இவ் வளவையும் அளித்து இறைவனே! மேற்கூறியவற்றைத் தவிர நான் மனம் மாறி எந்த வரம் கேட்டாலும் கொடுக் கக்கூடாது. உன் திருவடி வேண்டும்" என்று கேட்டார். எளிய வாழ்க்கை வாழ்ந்தால் உயர்ந்த எண்ணங்கள் ஏற்படும் என்பது நம் முன்னோர்களின் முடிபு.

**உடுக்கக் கவிக்கக் குளிர்காற்று வெய்யிலொடுங்கி வந்தால்**
**தடுக்கப் பழைய ஒரு வேட்டியுண்டு: சகமுழுதும்**
**படுக்கப்புறம் திண்ணை எங்குமுண்டு: பசித்துவந்தால்**
**கொடுக்கச் சிவனுண்டு நெஞ்சே நமக்குக் குறையு மில்லையே.**

—பட்டினத்தார்

காண்பதற்கு இறைவன் கண் கொடுத்துள்ளான். நோக்கியறிய மனமும் உள்ளது. பாடுவதற்கு பாடல் உண்டு. கேட்கச் செவியுண்டு. பூசிக்க மலர்களும் உள்ளன. ஏற்றுக்கொண்டு அருள் செய்வதற்கு ஒரு இறைவனுமிருக்கிறன். இம்மனிதன் இவ்வளவிருந்தும் தன் உடம்பை வீணாக மண்ணுக்கு அளிக்கிறனே என்கிறர் பட்டினத்தார்.

**கண்ணுண்டு காண: கருத்துண்டு நோக்க: கசிந்துருகிப்**
**பண்ணுண்டு பாட: செவியுண்டு கேட்க: பல்பச்சிலையால்**

எண்ணுண்டு: சாத்த எதிர்நிற்க ஈசனிருக்கையிலே
மண்ணுண்டு போகுதையா கெடுவீர்ந்த மானுடமே.

எளிய வாழ்க்கை வாழ்ந்து ஏற்றம் பெற்றவர்கள் நம் நாட்டு ஞானிகள். பணங்கிடைத்தால் கிணற்றிலும் குளத்திலும் எறிந்தனர், ராமலிங்க சுவாமிகள்.

பணத்திலே ஆசையொன்றிலை நான்
படைத்த அப்பணங்களைப் பலகால்
கிணற்றிலே எறிந்தேன் குளத்திலும் எறிந்தேன்
கேணியில் எறிந்தனன் எந்தாய்!
குணத்திலே நீதான் கொடுக்கின்ற பொருளை
யெறிகலேன்: கொடுக்கின்றேன் பிறர்க்கே
கணத்திலே எல்லாம் காட்டு நின்னருளை
கண்டனன் இனிச் சொல்வதென்ன?—அருட்பா

கையுறவீசி நடப்பதை நாணிக் கைகளைக்கட்டியே நடந்தேன்
மெய்யுறக்காட்ட வெருவிவெண்துகிலால் மெய்யெலாம் ஐயகோ மறைத்தேன்
வையமேற் பிறர்தம் கோலமும் நடையும் வண்ணமும் அண்ணலே சிறிதும்
பைய நானூன்றிப் பார்த்ததேயில்லை பார்ப்பனேல் பயமிகப்படைப்பேன்.
—அருட்பா

கந்தைத் துணியை யணிந்து பாவபுண்ணியம் இரண்டு மற்ற வழியில் யோக நிலையடையும் பெரியோன், குழந்தை யையும் பித்தனையும் போல எவ்விதக் கவலையும் இல்லாது மகிழ்ச்சியுடன் இருப்பான் என்கிறார் ஆதிசங்கரர்.

रथ्याकर्पटविरचितकन्थ:
पुण्यापुण्यविवर्जितपन्थ: ।
योगी योगनियोजितचित्त:
रमते बालोन्मत्तवदेव ॥

ரத்யா கர்பட விரசித கந்த:
புண்யாபுண்ய விவர்ஜித பந்த: ।
யோகீ யோகநியோஜித சித்த:
ரமதே பாலோன்மத்தவதேவ ॥

தமிழாக்கம்

பாதை கிடக்கும் கந்தையினுடைகொள்
பாவம் புண்ணியமறு நெறியுங்கொள்
யோகத்தனிலாழ் சிந்தைகொள் யோகி
பாலன் பித்தன்போல மகிழ்வான், 22

## 23. வாழ்வுயெனும் கனவு

வாழ்க்கையினைக் கனவு என்பர் பெரியோர். கனவிலும் நாடகத்திலும் நடப்பதெல்லாம் உண்மையாகுமா ?

கனவதனில் கண்ட பொருள் செலவுக்காமோ?
குனிக்கும் கங்குற்கூத்தில்
இனர் அமைச்சர் என வேடம்புனைந்தவர்
தம்மானை எங்கும் ஏகுமோ ? விண்
கனமான்போல் அழியுமிந்தப்புவி வாழ்வு
நிலையென்ன ? கருதிக்கோடி
நினைவுற்ருய் உடல் வீழில் என்செய்வாய் ?
அறிவில்லா நெஞ்சக்கல்லே !

நான் என்பது யார்? எனப் பட்டினத்தார் ஆராய்கிருர். எனது தலைமுடியை இழுத்தால் வலிக்கிறது. இது நாளு? முடி வளர்ந்த தோல் பரப்பு நாளு? புண்ணிடை ஊரும் ரத்தம் நாளு? எலும்பு நாளு? எலும்பு வைத்துக் கட்டிய நரம்பின் கயிறு நாளு? தசை நாளு? உடம்பிலுள்ள பிணி நாளு?

"இன்னது யானென்று அறியேன் என்னை
ஏதினும் தேடினேன் யாதினும் காணேன்"

நின் திருவருள் கிடைத்தது. ஞானக்கண் பெற்றேன். நின் தன்மை கண்டேன். நின்னைக் கண்டதும் என்னைக் கண்டேன். பிறரையும் கண்டேன். "உலகில் எல்லா இடத்திலும் நீ இருப்பதையும் உனக்குள் எல்லாமிருப்பதையும் கண்டேன்" எனவே இறைவனைக் காணுதவர் தன்னைக் காண முடியாது என்கிருர்.

ஊரும் சதமல்ல: உற்ருர் சதமல்ல: உற்றுப்பெற்ற
பேரும் சதமல்ல: பெண்டீர் சதமல்ல: பிள்ளைகளுஞ்
சீரும் சதமல்ல: செல்வம் சதமல்ல: தேசத்திலே
யாரும் சதமல்ல: நின்ருள் சதம் கச்சிவேகம்பனே.

நம் மனைவி, மக்கள், உற்ருர், உறவினர் யாவரும் கனவில் வரும் பாத்திரம் போன்றவர். நிலையானவரல்ல. இறைவனது திருவடிதான் நிலையானது. அவனருளாலே அவன் தாள் வணங்கவேணும்.

பெரியோர்கள் தமது மனத்திற்கு உபதேசம் செய்தனர்.

ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு உயர் செல்வமெல்லாம்
அன்றென்றிரு பசித்தோர் முகம்பார்: நல்லறமும் நட்பும்
நன்றென்றிரு நடுநீங்காமலே நமக்கிட்டபடி
என்றென்றிரு மனமே உனக்கே உபதேசமிதே.

பயனேயில்லாத கனவு போன்ற உலகை மறந்து இறைவனது நாமம் கூறி ஆன்ம விசாரணை செய்ய அறிவு புகட்டுகிருர் அருட்குரு.

कस्त्वं कोऽहं कुत आयातः
का मे जननी को मे तातः ।
इति परिभावय सर्वमसारम्
विश्वं त्यक्त्वा स्वप्नविचारम् ॥

கஸ்த்வம் கோஹம் குத ஆயாத:
கா மே ஜனனீ கோ மே தாத: ।
இதி பரிபாவய ஸர்வமஸாரம்
விஸ்வம் த்யக்த்வா ஸ்வப்னவிசாரம் ॥

தமிழாக்கம்

பயனேயற்றது கனவை நிகர்ப்பது
உலகினை நீத்திடு உறுவதென் நானெது
யவன் என் அனையார் எந்தையுமார்
எனுமிவை நீ பரிசீலனை செய்வாய். 23

## 24. எங்கும் நிறைந்துளன்

இறைவன் எங்குமே உள்ளான். பிரகலாதன் தன் தந்தையான இரணியனிடம்.

**சாணினும் உளன் ஓர் தன்மை அணுவினைச் சதகூறிட்ட**
**கோணினுமுளன்: மாமேருக்குன்றிலுமுளன்: இந்நின்ற**
**தூணினுமுளன்: முன்சொன்ன சொல்லினுமுளன்:**
**இத்தன்மை**
**காணுதி விரைவினென்ருன்''**

கம்பன் அயோத்தியா காண்டத்திற்குக் காப்புச் செய்யுள் பாடவந்த இடத்தில், "உடம்பிற்குள் உயிர் உள்ளது. உயிர் உள்ளதற்கு அடையாளமாக உடம்பு பூராவும் உணர்ச்சி பரவியுள்ளது''

**ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும்**
**புறத்துள் உளன் என்ருர்,**

பாரதி இறைவனை எங்குமே கண்டான். கண்ணனைப் பாடும் காலத்தில்

**காக்கைச் சிறகினிலே நந்தலாலா உன்றன்**
**கரியநிறம் தோன்றுதடா நந்தலாலா—தீக்குள்**
**விரலை வைத்தால் நந்தலாலா—உன்னை**
**தீண்டும் இன்பம் தோன்றுதடா நந்தலாலா.**

இப்படியிருக்க ஏன் பேதம்? நாமும் தெய்வரூபம். நம்மிடம் சண்டையிடும் ஒருவனும் தெய்வரூபம். கோபம் ஏன் கொள்ளவேணும்? கோபம் குணத்தை யழிக்கும். நாம் கோபம் கொள்வதால் நம் உடம்பிற்குக் கெடுதலே தவிர, பிறர் சிறிதும் நம்மை லக்ஷ்யம் செய்யமாட்டார். பிறர் பயப்படமாட்டார் என்பதை நன்கு அறிந்து கொண்டால் கோபம் நீங்கும்.

**கண் சிவந்திட மெய்யெலா நடுங்கிடக் காலால்**
**மண் சிதைந்திட உதைத்து நாக்கடித்து இதழ் மடக்கி**
**என் சிதைந்திடச் சினம்கொள்வீர் நும்மோடு இதயம்**
**புண் சுமந்ததலால் பிறர்க்கு என் குறை புகலுவீரே.**
—*நீதிநூல்*

எல்லாவற்றிலும் இறைவனிருக்கிருன் என்ற எண்ணம் கொண்டு சினத்தை யடக்கி இறைவனை வணங்குமாறு கூறுகிருர் ஸ்ரீ சங்கரர்

त्वयि मयि सर्वत्रैको विष्णुः
व्यर्थं कुप्यसि मय्यसहिष्णुः ।
सर्वस्मिन्नपि पश्यात्मानम्
सर्वत्रोत्सृज भेदाज्ञानम् ॥

த்வயி மயி ஸர்வத்ர ஏகோ விஷ்ணு:
வ்யர்த்தம் குப்யஸி மய்யஸஹிஷ்ணு: ।
ஸர்வஸ்மின்னபி பச்யாத்மானம்
ஸர்வத்ரோத்ஸ்ரிஜ பேதாஜ்ஞானம் ॥

தமிழாக்கம் :

பிறவிலும் நம்மிலும் உறைபவன் விண்டே
பொறுமையிலாய் வீண்சினமேன் கொண்டாய்
பேதம் விளை அஞ்ஞானம் களைவாய்
யாவிலும் ஆன்மா தானே உள காண். 24

## 25. எல்லோரும் ஓர் நிறை

பகைவனென்றும், உறவென்றும் பாகுபாடில்லாது இருப்பது தெய்வத் தன்மை. தன்னை வந்தடைந்த விபீடணனை தம்பியாக ஏற்றுக்கொண்ட இராமபிரான், இராவணனிடம் பகைமை பாராட்டவில்லை. இராவண-னது கெட்ட குணத்திலேதான் இராமன் குற்றங்கண்டான். முதல் நாள் போரிலே தனது பலம் பூராவும் இழந்து நின்ற இராவணனை ' இன்று போய்ப் போர்க்கு நாளை வா ' என இராமபிரான் கூறினன். இராமனின் இதயத்தை நன்கு அறிந்த கம்பன் " இன்று தோல்வியுற்ற இராவணன் சீதையை இராமனிடம் திரும்ப ஒப்புவித்துத் தஞ்சம் அடைந்துவிட்டால், தஞ்சமடைந்தவரைத் தாங்கும் இராமபிரான் இராவணனை ஏற்றுக்கொள்ளுவான். இலங்கையை விபீடணனுக்கு அளிக்கிறேன் எனக் கூறிய வாக்கை நிலைநிறுத்துவதற்காக வீடணனுக்கு இராவணனிடமிருந்து இலங்கையை வாங்கித் தந்து,

அயோத்தி அரசை இராவணனுக்கே கொடுத்துத் தனது தம்பியர் மூவருடன் தான் என்றும் காட்டிலேயே இருந்து விடுவான்'' என்னும் பொருள்படப் பாடலை ''கோசல தேசத்தை வழங்கவுள்ள வள்ளல்'' என முடிக்கின்றான்.

**ஆளையா உனக்கமைந்தன மாருத மறைந்த**
**பூளையாயின கண்டனை! இன்று போய்ப் போர்க்கு**
**நாளை வா என நல்கினன் நாகிளங்கமுகின்**
**வாளை தாவுறும் கோசல நாடுடைய வள்ளல்.**

என்பது கம்பன் வாக்கு. பகைமை யென்பதில்லாது எல்லோரிடமும் அன்பு காட்டிய கருணையாளன் என்பது வெளிப்படை. இராவணன் மறைந்த பின் "பிறர் மனை-யைக் கண்டு ஆசைகொண்டு அழிந்த ஒருவனுக்கு நான் ஈமக்கடன்கள் செய்ய முடியாது'' என மறுத்த வீடண-னிடம் இராமன் ''மரணத்திற்குப் பின் பகைமையென்பது அறவே கூடாது. நீ உன் முன்னவனுக்குக் கடன்கள் செய்ய மறுத்தால், அதை நானே செய்வேன்'' என இராமன் கூறியதாக வான்மீகர் வாக்கு. எல்லாமே இறைவன் நிலை என்பது பெரியோர் கருத்து. இராமனால் அழிக்கப்பட்ட வாலிகூட, மரணத்தறுவாயில் '' **பாவ நீ தரும நீ பகையு நீ உறவு நீ** '' எனப் போற்றுகிறான்.

எல்லாமே இறைவன். யாவும் ஒன்றே என்ற சமரச உணர்ச்சி மனிதனுக்கு வந்துவிட்டால் விஷ்ணுபதம் அடையலாம்.

**ஊனின் மேய ஆவி நீ: உறக்கமோடுணர்ச்சி நீ**
**ஆனில் மேய வைந்தும் நீ: அவற்றுள் நின்ற**
**தூய்மையே நீ**
**வானினோடு மண்ணும் நீ: வளங்கடற் பயனும் நீ**
**யானும் நீயதன்றி யெம்பிரானும் நீ யிராமனே.**

*—திருமழிசையாழ்வார்*

சுகம், துக்கம், பகை, நட்பு, சமாதானம், யுத்தம் யாவும் ஒன்றே என்று சலனமில்லாதிருப்பவன் விஷ்ணு பதம் அடைவான் என்பது குறிப்பு.

शत्रौ मित्रे पुत्रे बन्धौ
मा कुरु यत्नं विग्रहसन्धौ ।

भव समचित्तः सर्वत्र त्वम्
वांछस्यचिराद्यदि विष्णुत्वम् ।।

சத்ரௌ மித்ரே புத்ரே பந்தௌ
மா குரு யத்னம் விக்ரஹ சந்தௌ ।
பவ ஸமசித்த: ஸர்வத்ர த்வம்
வாஞ்சஸ்யசிராத் யதி விஷ்ணுத்வம் ॥

தமிழாக்கம்

பகைவன் நண்பன் புதல்வன் உறவே
சமரம் அமைதி எனவே கருதேல்
விரைவில் விண்டுவின் தன்மை விரும்பின்
சகலமும் சமமாக் கொண்டிரு நம்பி. 25

## 26. ஞானப்பயிரில் களை

பக்தி-என்ற விதையை யூன்றி முக்தி-என்ற அறுவடை செய்யவேணுமென்று ஞானிகள் உழவுத் தொழிலாகவே ஞான வாழ்க்கையைப் பேசுவர்.

மெய்ம்மையாம் உழவைச் செய்து,
விருப்பெனும் வித்தை வித்தி
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறையெனு நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலியிட்டுச்
செம்மையுள் நிற்பராகிற் சிவகதி விளையுமன்றே.

என்பது அப்பர் தேவாரம். இதை விளக்குவது போல் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் "நெஞ்செனும் நிலத்தில் உள்ள வஞ்சகமென்னும் மரத்தை வேரோடு எடுத்துப் பதஞ்செய்து, அன்பு என்ற பாத்தியிட்டு, உண்மை என்ற எருப்போட்டு, பக்தியாகிய விதையை ஊன்றி, ஆர்வமாகிய கவனமென்ற தண்ணீர் பாய்ச்சி, ஐம்புலன்களாகிய பட்டி மாடுகள் வராத வண்ணம் சாந்தமென்னும் வேலியிட ஞானமென்ற முளை வெளி வரும். கருணை என்ற இலை தளிர்க்கும். அதுபோது ஆசை, கோபம் என்ற களையும் முளைக்கும். அதனை

வாங்கிவிட்டால் கண்ணீர் என்ற மலர் அரும்பி, ஐந்தெழுத்தாகிய காய் சிவக்கனியாகப் பழுத்து இன்பம் அளிக்கும். இவ்வாறு நல்வழியில் செல்லாதவர் சிலர்.

நெஞ்சென்ற நிலத்தை தரிசு போட்டுவிட்டால் காமம் என்ற காடாக மண்டும். ஐம்புலன் என்ற வேடர் அடிக்கடி தோன்றுவர். நானெனும் அகங்காரமான மரம், பாவமான இலைகளுடன் தோன்றி, கடுமை என்ற அரும்பு கொடுமையாக மலர்ந்து, துன்பமென்ற காயாக மாறி, மரணமென்ற பழமாகி தனக்கும் பிறர்க்கும் உபயோகமில்லாது அழிந்து போவர்." என்பர் பட்டினத்தார்.

காமம் (ஆசை) குரோதம் (கோபம்) மோகம் (பெண்ணாசை) லோபம் (ஈயாமை) இவற்றை நீக்கிவிட்டால் ஆன்மஞானம் கிடைக்கும். சம்சாரம் என்னும் கட்டுண்டு துன்புறமாட்டார்.

**தத்துவ விதையை நட்டுச் சமரச கங்கை பாய்ச்சி**
**சக்தியின் ஊட்டம் தந்து: தன்னலக்களையை வாங்கி**
**நித்தியம் அன்பு பூத்து நின்மலஞானமான**
**முத்தியைப் பழுக்கவைத்த முதல்வனே போற்றி போற்றி**

என்கிறார் கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார்.

கம்பனும் அரக்கர்களைப்பற்றிக் குறிக்குமிடத்தில் ஞானிகள் கண்டு பயப்படும் ஆசை, கோபம் மாதிரியான அரக்கர் (காம வெகுளியென நிருதர்) என்கிறான். ஞானமான பயிருக்கு ஆசை, கோபம் (இவைகள் சுயநலம் காரணமாக உண்டாகுபவை) என்ற களைகள் உண்டு என்கின்றனர் ஞானிகள். இந்தக் களைகளை நீக்கி ஆன்ம விசாரணை செய் என்கிறார் ஸ்ரீ சங்கரர்.

कामम् क्रोधम् लोभम् मोहम्
त्यक्त्वात्मानम् भावय कोहम् ।
आत्मज्ञानविहीना मूढा:
ते पच्यन्ते नरकनिगूढा ॥

**காமம் க்ரோதம் லோபம் மோஹம்**
**த்யக்த்வா மானம் பாவய கோஹம் ।**

ஆத்மஞான விஹீனா மூடா:
தே பச்யந்தே நரக நிகூடா: ||

தமிழாக்கம்

காமம் க்ரோதம் மோகம் லோபம்
களை: நான் யாரான்ம விசாரணை செய்
ஆன்மப்பொருள் தேரு மூடர் சம்
சாரத்தளறில் நீள் துன்புறுவர். 26

## 27. கருணை நிறைந்த புத்திமதி

பாண்டித்யம் அடைவதற்காகப் படிக்கக்கூடாது, பக்தியுண்டாவதற்காகவே படிக்கவேணும். அதனாலே கீதையை இறைவனது ஆயிர நாமம் கூறும் சகஸ்ரநாமத்தையும் படிக்குமாறு புத்தி கூறுகிறார் ஸ்ரீ சங்கரர். கண்ணன் நமக்கு உபதேசிக்கிறான் கீதையில். கண்ணனை நாம் வணங்குகிறோம். சகஸ்ர நாமபாராயணம் செய்வதன்மூலம் என்பது குறிப்பு. மனம், வாக்கு, காயமாகிய திரிகரணங்களாலும் பக்தி செய்யுமாறு கூறுகிறார். கீதையையும், சகஸ்ரநாமத்தையும் ஓதுவது வாக்கினால் செய்யும் (வாசிகம்). திருமகள் நாயகனை திருமாலை தினமும் தியானி என்பது, (மானசம்) மனதால் செய்யக் கூடியது. திருமாலையும் திருமகளையும் சேர்த்து நினைப்பது தான் முறை. [சீதையை நீக்கி இராமனை மாத்திரம் அணுகிய சூர்ப்பனகையும், இராமனை நீக்கிச் சீதையை மாத்திரம் அணுகிய இராவணனும் அழிந்தனர். ஸ்ரீ ராம ஜயம் என்று எழுதுவதைக் காட்டிலும் 'ஸ்ரீ சீதாராமஜயம்' என எழுதுவது மிகவும் மேன்மையானது என்பர் பெரியோர்.]

பழைய வாசனை காரணமாக மனம் கெட்ட வழிக்குச் செல்லலாம். என்வே நல்லவருடன் சேர். ஏழைகளுக்கு இரக்கப்பட்டு தானம் செய் (இவை காயிகம்) என்பவை உடலால் செய்யப்படும் தவம். சந்தனமரத்திற்குப் பக்கத்திலிருக்கும் வேறு மரமும் சில சமயம் அந்த நல் வாசமே வீசும். மகமேருவான தங்க மலையை அடைந்த காகம் தங்க ஒளி தன்மீது பட பொற்காக்கை மாதிரி காட்சி தரும். பாலில் தண்ணீர் சேர்க்கும்போது தண்ணீருக்குப் பால் நிறம் வரும். பெரியோர்களுடன் உறவு கொண்டால் நல்ல குணம் படியும் என்பர்.

பிறருக்குக் கொடுப்பதால் என்னுடையது என்ற (மமதை) நினைவு நீங்குமென்பர். கொடையில்லாதவனின் வாழ்வு வீணானது. பிறருக்கு உதவாதவன் பிறவியே வீண் என்பது பெரியோர் முடிவு,

ஓயாமல் பொய் சொல்வார் : நல்லோரை
நிந்திப்பார் : உற்றுப்பெற்ற
தாயாரை வைவர் : சதியாயிரம் செய்வர் :
சாத்திரங்கள்
ஆயார் : பிறருக்கு உபகாரம் செய்யார் :
தமையண்டினோர்க்கு ஒன்றும்
ஈயார் : இருந்தென்ன போயென்ன காண்
கச்சியேகம்பனே.

மனோ வாக்குக் காயங்களை இறைவன் வழி செலுத்த அவனது அருளை வேண்டுவோமாக !

गेयम् गीतानामसहस्रम्
ध्येयम् श्रीपतिरूपमजस्रम् ।
नेयम् सज्जन संगे चित्तम्
देयम् दीनजनाय च वित्तम् ॥

கேயம் கீதா நாமஸஹஸ்ரம்
த்யேயம் ஶ்ரீபதிருப மஜஸ்ரம் ।
நேயம் ஸஜ்ஜன ஸங்கே சித்தம்
தேயம் தீனஜனாய ச வித்தம் ॥

தமிழாக்கம்

கீதை ஸஹஸ்ர நாமம் ஓது
திருமகள் பதியடி தினமும் கருது
ஸாது ஜனங்களின் நேயம் கொள்வாய்
தனமே வறியவர் மகிழ்வுற ஈவாய். 27

## 28. தெரிந்தும் தெரியாதவர்

எதை வென்றாலும் பெண்ணாசையை வெல்வது அரிது. காமத்தைக் காட்டிலும் கொடியதொன்று கிடையாது என்பர் கந்தபுராணமுடையார்.

**தீமையுள்ளன யாவையும் தந்திடும் : சிறப்பும்**
**தோமில் செல்வமும் கெடுக்கும் :**
**நல் உணர்விளைத் தொலைக்கும் :**
**ஏம நன்னெறி தடுத்திருள் உய்த்திடும் : இதனால்**
**காமமன்றியே ஒரு பகையுண்டு கொல் கருதில்.**

காமம் தேவனான இந்திரனையும் அரக்கனான இராவணனை யும் சூரங்கான வாலியையும் கெடுத்தது. காமத்தால் அழியாதவர் உலகத்திலேயே கிடையாது. கல்வி தொடங்குங்கால் துன்பமாய், முடியுங்கால் இன்பமாயிருக் கும். காமம், தொடங்குங்கால் இன்பமாய் முடியுங்கால் துன்பத்தில் முடியும். ஆசையே யில்லாதவன் பெண்ணாசைப்பட்டு, அவளை மணந்து, அவளைக் காப்பதற்காக பணந்தேட ஆரம்பித்துப் பொன்னாசைக்கு உள்ளாகு கிறான். அவளைப் பத்திரமாகக் காப்பதற்காக ஒரு வீடு வாங்குகிறான். அவளுக்குச் சுகமாக உணவு தருவதற்காக ஒரு நிலம் வாங்குகிறான். மண்ணாசை வந்துவிடுகிறது. மூவாசையென்ற காற்றிலே அலைபட்டு அழிகிறான்.

காமத்தால் கடைப்பட்டவன் கடைசியில் ரோகத் தால் பீடிக்கப்படுகிறான். மரணமடைகிறான். இதெல்லாம் அறிந்தும் பாவம் புரியாமலிருப்பதில்லை.

**பிறந்து மண்மீதிற் பிணியே குடிகொண்டு: பேரின்பத்தை**
**மறந்து சிற்றின்பத்தின்மேல் மயலாகி: புன்மாதருக்குட்**
**பறந்துமன்றே தடுமாறிப் பொன்தேடி: அப்பாவையர்க்**
**கீந்து**
**இறந்திடவோ பணித்தாயிறைவா கச்சியேகம்பனே.**

சீக்கிரம் அழிவதாலும், அற்ப சுகந்தருவதாலும் சிற்றின்பமென உலக வாழ்விற்குப் பெயர் தந்தனர் பெரியோர். என்றும் நிலையானதும், நற்கதியளிப்பதும், நினைக்குந்தொறும் காணுந்தொறும் வற்றாத இன்பம் தரும் இறைவனின் திருவடி த்யானத்தால் கிடைக்கும் இன்பத் தைப் பேரின்பம் எனப் பெயரிட்டனர். குபேர பதவி

கிடைக்கத் தகுதியடையலாமே. குப்பை மேட்டை நோக்கி ஏன் போகிறுன் மனிதன் என உருகிப் பேசுகிறது. ஸ்ரீ ஆசாரியாளின் திருவுள்ளம்.

सुखतः क्रियते रामाभोगः
पश्चाद्धन्त शरीरे रोगः ।
यद्यपि लोके मरणम् शरणम्
तदपि न मुञ्चति पापाचरणम् ॥

ஸுகத: க்ரியதே ராமா போக:
பச்சாத் ஹன்த சரீரே ரோக: ।
யத்யபி லோகே மரணம் சரணம்
ததபி ந முஞ்சதி பாபாசரணம் ॥

தமிழாக்கம்

மகளிர் போகம் மகிழ்வாலாகும்
பிறகே தேகம் உறுமே ரோகம் ।
மரணம் உறுதி அறியும் உலகே
பினரும் பாவச் செயலறுகிலரே ॥ 28

## 29. பொருள் பொருளற்றது!

செல்வம் பயனற்றது. " ஒரு கோடிப் பொன் கொடுக்கிறேன் ஒரு நிமிடம் ஆயுளை அதிகம் கொடு, உறவினருக்கு ஒரு வார்த்தை சொல்லி வருகிறேன் என்ருல் யமன் விடுவானே ?" எனக் குசேலர் தன் மனைவியிடம் கேட்கிருர்.

கோடி பொன்னளிப்பனின்றே கோடிரோர் மாத்திரைக்கு
ளுடிய கிளைக்கோர் வார்த்தை உரைத்தடைகுனென்ருலும்
தேடிய காலதூதர் சிமிழ்த்தல் விட்டொழிவரே கொல்
வாடிய மருங்குனங்காய் மாண்பொருட் பயன் கண்டாயே.

செல்வம் நம்மை யமனிடமிருந்து காப்பாற்ருது. ஆனுல் தீமையெல்லாம் செய்யும். நல்லவரைப்

பொல்லாதவரென்றும், பொல்லாதவரை நல்லவரென்றும் நினைக்கச்செய்யும். அனுவசியமான பெண்ணசையை உண்டாக்கும். செருக்கு ஏற்படும். பிறரை மதிக்க வைக்காது.

விதுரர் கண்ணனிடம் செல்வர் நிலை பற்றிக் கூறும் காலத்து "செல்வம் கிடைத்தால் தருமத்தைச் சிறிதும் எண்ணமாட்டார்; என்ன பேசுகிறோம் என்பது அறியாது பேசுவார்: சுற்றத்தாரையும் நண்பர்களையும் நினைக்க மாட்டார். பகைவரின் வலிமையை நினைக்காது அவரை வெல்லவேண்டுமென்ற குறிக்கோளுடனே யிருப்பார். பாவத்தின் பயனையும் அறியமாட்டார்" என்றார்.

**செல்வம் வந்துற்றகாலைத் தருமமும் சிறிது பேணார்;**
**சொல்வன அறிந்து சொல்லார் : சுற்றமும் துணையும் நோக்கார் ;**
**வெல்வதே நினைவதல்லால் வெம்பகை வலி தென்றெண்ணார் ;**
**வல்வினை விளைவும் ஓரார் : மண்ணில் மேல் வாழு மாந்தர்.**

குழந்தையாக இருந்தபோது அடித்து மிரட்டினதற்குப் பயந்து நம் கால்களைக் கட்டிக்கொண்டே அழுத சிறுவன் நாம் என்ன பணமுள்ளவராயிருந்தாலும், வயது முதிர்ந் தால் நம்மை மிரட்டுகிறான். நம் குழந்தைகள்கூட நம்மை மதிப்பதில்லை. என்ன பயன் செல்வத்தால் என்கிறார் ஜகத்குரு.

अर्थमनर्थं भावय नित्यम्
नास्ति ततः सुखलेशः सत्यम् ।
पुत्रादपि धनभाजाम् भीतिः
सर्वत्रैषा विहिता रीतिः ॥

அர்த்தமனர்த்தம் பாவய நித்யம்
நாஸ்தி தத: ஸுகலேச: ஸத்யம் ।
புத்ராத் அபி தனபாஜாம் பீதி:
ஸர்வத்ரைஷா விஹிதா ரீதி: ॥

தமிழாக்கம்

செல்வத்தாலொரு பயனும் இலதே
சற்றும் சுகமே இலை சத்தியமே
செல்வர் தனையர் தமையும் வெருவும்
செய்தி உலகின் முறை நித்தியமே. 29

## 30. உண்மையும் பொய்யும்

உண்மையெது? பொய்யெது? என்பது பற்றிப் பேசும்போது இருப்பது பொய், போவது மெய் என்றார் பட்டினத்தார். எனவே பொய்யான எதையும் நம்பாது. மனிதன் கவனமாகச் செய்யவேண்டியவை அட்டாங்க-யோகம்: அவை வருமாறு:

1 பொய், கொலை, திருடு, காமம் இவைகளை நீக்கி, ஐம் புலன்களை அடக்கியிருத்தல், இயமம் எனப்படும்.

2 தவம், தூய்மை, தத்வம் பற்ற யோசித்தல், தெய்வ வழிபாடு முதலியவை நியமம் என்ப.

3 ஆசனம்: யோகாசனம் செய்தல், பத்மாசனம், சுகாசனம் போன்றவை.

4 ரேசகம், பூரகம், கும்பகம் ஆகிய சுவாசங்களை அடக்கியாளும் முறை பிராணயாமம்.

5 பிரத்யாகாரம்: இந்திரியங்களை விஷயங்களிலிருந்து திருப்பல்: உலகத்திலுள்ள யாவற்றையும் இறைவனாகவே காணல்.

6 தாரணை: மனத்தை ஒருப்படுத்தல், முழங்கால், இருதயம், கழுத்து முதலான இடங்களில் பிரமன் முதலான மூர்த்திகள் இருப்பதாகப் பாவித்தல்.

7 தியானம்: ஐம்புலனடக்கிச் சிவயோகம் சேர்தல்.

8 சமாதி: மனத்தைப் பரம்பொருளுடன் நிறுத்தி ஐக்யப் படுத்தல்.

(விரிவஞ்சி விடுக்கிறோம். வல்லார்வாய்க் கேட்டுணர்க.)

உலகத்தில் அழியும் பொருள்களைத் தேடி அழியாமல் பரம்பொருளைத் தேடுவதற்காக அட்டாங்க யோக முறைகளைக் கவனி என்கிறார் யோகமூர்த்தியான ஜகத்குரு.

प्राणायामम् प्रत्याहारम्
नित्यानित्यविवेकविचारम् ।
जाप्य समेतसमाधिविधानम्
कुर्ववधानम् महदवधानम् ॥

ப்ராணாயாமம் ப்ரத்யாஹாரம்
நித்யாநித்ய விவேகவிசாரம் ।
ஜாப்ய ஸமேத ஸமாதி விதானம்
குர்வவதானம் மஹத் அவதானம் ॥

தமிழாக்கம்

பொருளுள திலதெது தெரிய விசாரம்
பிராணாயாமம் பிரத்யாகாரம்
நெறிசேர் சபமினை சமாதி முறையை
நினைவினிலதிக வனமாக நீ வை. 30

## 31. குரு பாதமே கதி

உலகம் ஒரு சந்தைக் கூட்டம். சந்தை கூடிக்கலைவது போல் நம் சுற்றத்தார் கலைந்துவிடுவார். உலகம் ஒரு நாள் சூனியமாகவே தெரியும். குடத்தைக் கவிழ்த்து வைத்தால் நீர் காலியாகிவிடுவது மாதிரி வாழ்வு காலியாகி விடும். நம் உடலும் நம்பத்தகாத பொம்மை.

**நாட்டமென்றே யிரு சற்குருபாதத்தை நம்பு பொம்ம**
**லாட்டமென்றே யிரு பொல்லா உடலை: அடர்ந்த சந்தைக்**
**கூட்டமென்றே யிரு சுற்றத்தை: வாழ்வை குடங்கவிழ்**
**ஓட்டமென்றே யிரு நெஞ்சே உனக்கு உபதேசமிதே.**

எனக்கூறி பட்டினத்தார் சற்குருநாதரின் திருவடியைச் சரண் புகுமாறு கூறுகிறார். இறைவனைக் காட்டும் குருவை அடையும்போது உலகத்தோடு நம்மை இணைக்கும் ஆசையான சங்கிலி யறுபடவேண்டும். மாது, மக்கள் என்ற தளையை நீக்கவேணும். ஐம்புலன்களைச் சிதறி ஓடாவண்ணம் "மெய், வாய், விழி, நாசி, செவி"யாகிய வற்றை அடக்கவேணும். இறைவன் நாமத்தை வாய் பாட, காது கேட்க, விழி எங்கும் அவனையே காண, உடம்பு அப்பெருமானை நினைந்து மயிர்ப்புறம் பொடிப்ப, மூக்கு அவனது திருவடித் தாமரையை முகர்ந்து "பிள்ளைகன்" என்பது போன்ற மூக்காலே கூறக்கூடிய வார்த்தைகளைக் கூறவேணும். இருதயத்தில் ஆண்டவனைக் காணலாம். ஆண்டவன் எங்குமிருக்கிறான். நினைப்பவர் நெஞ்செல்லாம் நிறைந்திருக்கின்றான். அவனை வெளியிலே தேடவேண்டாம். நமக்குள்ளே இருக்கிறான். அவனைக் கண்டு ஆனந்தமடையுங்கள் என்கிறார் ஸ்ரீ சங்கரர்.

गुरुचरणाम्बुजनिर्भरभक्तः
संसारादचिराद्भवमुक्तः ।
सेन्द्रियमानसनियमादेवम्
द्रक्ष्यसि निजहृदयस्थम् देवम् ॥

குரு சரணம்புஜ நிர்பர பக்த:
ஸம்ஸாராத் அசிராத் பவமுக்த: |
ஸேந்திரியமானஸ நியமாத் ஏவம்
த்ரக்ஷ்யஸி நிஜஹ்ருதயஸ்தம் தேவம் ||

தமிழாக்கம்

குருபாத தாமரை பரவுதி உருகி
உறு சமுசாரமொர் தளை நீ களைதி
முறையுற மனமிந்திரியமிவை சிறைவை
இருதய முறையும் தேவினை யறிவை. 31

"வாசித்துக் காணொணாதது" என முதலத்யாயம் தொடங்கினோம். நாசிக்குள் பிராணவாயுவை ரேசித்தெட்டாத தேசிகன் நாடிற்றுக் காணொணாதென்ற நாதனை இறைவனை நம்மால் அறிய முடியாது. ஸ்ரீ ஜகத் குரு கூறியுள்ளபடி குருநாதனைச் சரணடைவோம். நாம் வேறு எந்த குருவிடம் போவது? குருவையடைக என அறிவுறுத்திய ஆதிசங்கர ஸ்ரீ குருவையே சரணம் அடைவோமாக!

ஸ்ரீ குருநாதர் திருவடிகளே சரணம்.

## ஆசாரியன் துதி

இன்னல் தரும் பிறப்பிறப்பில் இடைவிடாது
உயிர்கட்கிரங்கி : பூமேல்
பொன்னவிருங் காலடியில் போந்து :
முழுதுணர் ஞானப்புலவனுகி
மன்னு சிவனே இவனென்று உலகமெலா
மதித்து ஏத்த : மறையின் அந்தத்
துன்னிய சூத்திரமுரைசெய் சங்கரா
சாரியன் தாள் தொழுதுய்வோமே.
—கோவை, கவியரசு, நடேச கவுண்டரவர்கள்

தமிழாக்கம் செய்துள்ள
புலவர் திரு ஐ. கோ. ராமநாதன் அவர்களின்
முடிவுரை :

ஈசன் காலடி ஆசானுல் அணி
மாசில் வடமொழி தேசில் மிளிர்துதி
தாஸன் அறிவிலி ஆசையினிது மொழி
காசில் புகழ் அரி நேசம்கொள வழி.

வாழ்க ஆசாரியன் திருவடிகள்
வாழ்க தமிழ் !
வாழ்க வடமொழி !
வாழ்க உலகெலாம் !

சுபம்

ஸ்ரீ ராமகதாப்ராண
V. தியாகராஜன்
1—2—77

# ஸ்ரீ ராமகதா சத்சங்கம் (SRS)

## புதுக்கோட்டை— 622001



1 பழைய துணிகளை வசூல் செய்து புதுப்பித்து ஏழைகளுக்கு அளிக்கிறோம்.

2 ஏழை மாணவர்களுக்காக பிரத்யேகமான சொற்பொழிவுகள் நிகழ்த்தி, மடிப்பிச்சை எடுத்து சீருடை, புத்தகங்கள் முதலான உதவுகிறோம்.

3 ஸ்ரீ ராமபிரானுக்கு கோடி அர்ச்சனை ஆரம்பித்து தலைமையகத்தில் நடைபெறுகிறது.

4 எமது கிளைகளில் கம்பராமாயணம் போன்ற நூல்களைப் பரப்புவதற்கு வகுப்புக்கள் நடைபெறுகின்றன.

5 தற்கால அறிஞர்கள் வெளியிடும் நூல்களை மக்களிடையே பரப்புகிறோம்.

6 புதிய புதிய தமிழ் அறிஞர்களை மேடையேற்றுவதற்கான உதவிகளை இயன்றவரை செய்கிறோம்.

7 தெய்வீக இலக்கிய சேவைகள் செய்வதுடன் எந்தெந்த வகைகளில் முடியுமோ அவ்வளவு வகைகளில் மக்களுக்குச் சேவை செய்ய முயலுகிறோம்.

---

(எமது குறிக்கோள்—51 கிளைகள்)

---

போன் : 659

சர்மாஸ் ஸானடோரியம் ப்ரஸ்,
கணேசநகர், புதுக்கோட்டை.

**Sri Ramakatha Sath Sangam,**
H. O.: Pudukkottai-622001

**Head office Secrtary:** Sri K. **Rajagopal**
General Secretary: Sri K. **Natarajan**

Address for correspondence:
Sri Ramakatha **THYAGARAJAN**
3119, East Second Street, Pudukkottai-622001
Telegrams: *Ramakatha, Pudukkottai*

*Branches:*

1. Namakkal *Secretaries:*
   Sri M. S. Balu, Telephone: 319
   83, Rengar Sannidhi Street, Namakkal
   Sri K. Jayaramulu, B. A., B. L.
   Telephone: 330
2. Palayamkottai *Secretaries:*
   Sri Subramania Pillai, Phone: 2499
   Sri Seetharaman, Phone: 2064
   79, Perumal South Street,
   Palayamkottai, Tirunelveli-2
3. Cuddallore. *Secretaries:*
   Sri R. Padmanaban, B. A., B. L.
   Main Road, Pudupalayam. Phone: 639.
   Cuddalore-1 (S. A. Dt.)
   Sri T. A. Natesan. Sri Rengachari
4. Srirangam *Secretaries*
   Sri P. R. Lakshminarayanan,
   195, West Chitra Street, Srirangam,
   Tiruchirapalli-620006
   Sri K. S. Kannan
5. Mayuram *Secretaries:*
   Sri N. Venkataraman, B. Sc., B. Ed.,
   154, Mahadhana Street, Mayuram.
   Sri R. Ramanathan.

Phone 6[illegible]
Sarma's Sanatorium Press, Ganeshna[illegible] [illegible]001